என்றுசொலப்பரி வெய்தியமன்னவ னவர்திரு வடிகளிலே
நன்றுவணங்கி யெலாமுணர்சற்குரு நாதசி காமணியே
துன்றுளம் வாய்மெய்கள் சுத்தியதாக வுமைச்சர ணுற்றனன் யான்
இன்றுணர்கின்றிலி ரோவெனை யாண்டருள் கென்று துதித்தனனே. (௩௰௯)

இவன்மிக வும்பரி சுத்தகுணத்தின னென்று மனங்கனிவாய்த்
தவலிலையின்றுபொன் வாரமியைந்தது தண்புனல் மூழ்கினையாய்ப்
புவனியையாள்பவ னேவருகென்றனர் புத்திகளித் தரசன்
நவம்வினை சற்குரு நாதர்தமபய நலங்கொடு சென்றனனே. (௩௨௰)

உள்ளம்விராக முறப்புனல் மூழ்கினனோர் கலையோடு புகீஇ
வெள்ள முடம்பகலச் செயவே றுடையின் றிடைமேவியதைப்
பிள்ள விரண்டு படுத்தியொர் துண்டின்மெய் நீர் பிரியச் செய்துபின்
விள்ளவொர் துண்டிடை மேவவுடுத்து விளங்குறு கோபியினால். (௩௨௧)

பன்னிரு நாமமு மிட்டுநிதஞ்செய் பவித்திர நற்கருமம்
துன்னிட முற்றின பின்கனி காய்மலர் தோற்றின கைக்கொடுசீர்
மன்னின தேசிகர் பூசைமுடித்திட வன்புன ரென்னை கொடங்
குன்னிய நெஞ்சொடு தேசிகர் பாலினி துற்று வணங்கினனே. (௩௨௨)

அஞ்சலி செய்தெதிர் நின்றவனைத்தனி யாரியர் பண்டொருகால்
எஞ்சலில் வந்தனை செய்கென வப்படியே தொழுதேந்தலுடன்
உஞ்சன னென்று தனுடல் பொருளாவியை யுத்த மருக்குதவித்
தஞ்ச மெனவெதிர் சற்குரு பூசைதனைச் செய்து நின்றனனே. (௩௨௩)

நின்றவனைப் புடை தங்க விருத்திய வன்றலை மேனி மிர்கை
ஒன்ற வமைத்துபதேசமு ஞற்றினருத்தமர் பின்பரசே
இன்றள வாயு யிரிம் சையை விட்டுளிரக்க மிகுத்தனை யாய்த்
துன்றரி பூசை செய்தொண்டரி னேசம் வையரி தின நோன்புறுவாய். (௩௨௪)

ஊரிதின நித்திரை தவிர்தியிராவனுமார் தமை நாடொறு நீ
தரிசன முற்றுதி யெனலும் விஞவுத ராபதி நும்மருளிற்
றிரிபிலதாக நடப்பதியான் மிகுதிண்ண மெனச்சொலி நீள்
பரிவுடன் மற்றவர் பாதம் விளக்கிய பய மினிதுண்டனனாய். (௩௨௫)

வனமலர் மாலையை யவர்களறை வனைந்துட னெண்ணிருபூ
சனமு மனத்தினி யற்றி முனங்கொணர் தருகனிகளை யினிதாய்
அனகர் முன்வைத் தனனவர வனுண்ணினை வத்தனையுந் தெரியா
மனமொரு மித்தினி துண்டனர் மிச்சிலை மன்ன வனுண்டனனே. (௩௨௬)

உண்டவனெண் முகநோக்கி மிகும்பரி வோடினி தோதுவர் நீ
தண்டலை சூழ்நகர் சென்றினி நின்னர சாளுதிசார் கெனலும்
திண்டிறலான ருடேசிகர் தம்முக நோக்கி யினித்திருவார்
மண்டல ளை மதிக்கி லெனும்மில் வழங்கின னாதலினே. (௩௨௭)

அவ்வரசாளுக நீரினியானு மடிக்கினி தேவல்செய்து
செவ்வ னிருக்க நினைந்துளன் யானிது திண்ணமெனச் சொலலும்
தெவ்வடு வீரமு னஞ்சனகன்புகழ் சேர்விற லம்பரிடன்
எவ்வ முறாதர சாண்டனர் ஞானமி யைந்து மகிக்கணரோ. (௩௨௮)

ஹரியருளா லரசாண் டவர்போ லரசாளுவதிற் குறைவென்
புரிதலை நன்கினியுனதர சென்வயினிற் புக வுய்த்தனையேல்
உரியதுனக் கெனதேவ லுஞற்றுத லினியுனதூ ரணுகித்
திரிதலிலா தரசாள்வ துதக்கதுசெய் கென வேவினரோ. (௩௨௯)

தேசிக ரிவ்வகை செப்பலு மன்னவர் சேவடியைப்பிரிய
நேசமுறாதவ ளுகியு மவர்நிய மித்ததை நீக்கிலனாய்ப்
பாச மிகுந்திரு கண்களி னீர்பெருகப் பதபங்கயமென்
பூசிர மேற்கொடு தான்வளரும்பதி சென்று புகுந்தனனே. (௩௯௰)

அன்று நகர்க்க ணிருந்து துயின்றரு ணோதய மாம்பொழுதே
நன்று விழித்துற பத்திரபுட்ப நலங்கிளர் சந்தனமே
மென்றுகில் பூடண வர்க்க முடன்கொடு மேளமுழங் கவிராய்த்
துன்றுறு சேனை தொடர்ந்துற மாநதி சென்று துளைந்தனனே. (௩௯௧)

ஆடியகன்புன லானபினன்குண வாயவை யத்தனையும்
நாடியுடன்கொடு தேசிகர் தம்முழை நண்ணி வணங்கினபின்
நீடியவஸ்திர பூடணம்யாவு நிரப்பின னிற்கவெலாம்
சூடிய தேசிக ரரசனை நோக்கினர் சொல்லுதலுற்றனரோ. (௩௯௨)

மன்னவ நீயிவை யாவுமெனக்குவ குப்பதினிற் பிரியம்
துன்னலன் வேண்டல னினியிவை செய்திட றுன்னுக வுன்பதிநீ
என்னலும் வேந்த னியம்பிய சற்குரு வின்முக நோக்கியையே
பன்னரு நும்மது சேவையிலாதுப சிக்கமு துண்கிலனே. (௩௯௩)

ஆகிய விவ்விர தத்தைமுடிப்பது மருளென நாள்கடொறும்
ஏகியொர்பூசை யியற்றின னுயுற விவர்தின மிப்படியே
வாகியன்மன்ன னியற்றுவதற்கு மனத்திசை வின்றிமகா
யோகிய னெஞ்சொடு வஸ்திர பூடண மொருவி யகன்றனரோ. (௩௯௪)

மிகவெகுதூர மகன்றுவனத்தொரு வெற்பிடை யேறியிருந்
தகமகிழ் ராமதி யானமுடன்பெரி தங்குற லாயினர் பின்
நகருறுகோ னுதயத்திலெழுந்துமு னண்ணுதல் போற்குருவாழ்
ககனம தெய்தின னங்கவரைத்தனி கண்டிலன் விண்டிலனே. (௩௯௫)

நாடினன் வஸ்திர பூடணமவ்வுழி நண்ணுதல் கண்டுமிக
வாடின னெய்திய சேனையுடன்செறி வனமுழுதுங் குருவைத்
தேடின னேக்கில னிவ்வகைமூன்று தினம் பகலும் மிரவும்
காடியல்வோரை யெதிர்ந்தில னுயிரு கண்கள்க லுழ்ந்தனனே. (௩௯௬)

என்றுகொலோகுரு சேவைகிடைக்குமெ னுமெலி வெய்தியினிச்
சொன்றி கொளேனவர் சேவைகிடைப்பள வென்றுதுணிந்தவனாய்
நின்றியல் கின்ற தறிந்துகனிந்துள நின்மலர் நேடரசன்
முன்றனி யெய்தினர் கண்டுமகிழ்ந்தடி முந்தி வணங்கினனே. (௩௯௭)

அடியில் விழுந்து புலம்பினனுக வகங்களி கொண்டவனைக்
கடிதுத மார்பொ டணைத்தழுகண்களி னீர்களை வுற்றுறுபோ
தொடிவறு மன்பின னவருபயப்பத பூசை யுஞற்றியையே
நெடிதும சேவை தினந்தோறும் யான்பெற நீரருள் கென்றனனே. (௩௯௮)

இலைவளை வுற்ற வெலாமுணர்கிற்பன வேதின சேவைவெ'ஞு
நிலைகொடு நிற்றியி தன்றியுமென்றனை நேர்தொழ வேண்டுதியேல்
உலைவற நேடுறு போதவ னெய்துவ னுறுகென வோதலுமன்
தலையில் வணங்கி நகர்க்கணடைந்தன னிவர்தனி யேகினரோ. (ருகக)

வேறு.

எகுங்கொடுவன மோவிம்மாவுலி யெனுமூ ரருக ரணியமெய்திப்
போகுங் கணநதி தீரந்தனிலொரு புறமேய் மரனொரு புடையேறி
ஆகும் பதியமர் சிறுபிள்ளைகளுட னணுகிக் கவிபயில் வதுபோலும்
வாகுங் கரமுடன் வாயுந்தெரிவுற மயல்செய் தயலுறு மரனேறி. (ருசம)

தாவிக்கிளைக ளுலாவித்தனைமிசை தத்திக்குதிபல தாஞ்செய்து
மேவித் திரிவுறு போதிற் சிறுமகர் மேல்வீ சுறுகலு மேலேற்று
மாவிற் புலிகரடிகள் கொண்டுறு சிறுமகர்மேல் விடலொடு மருள் செய்து
காவிற் கனிகளு நுகர் வுற்றவர் மிசை கற்போலுற வரிகவண் வீசி. (ருசக)

விளையாடினர் திரிவுறு நீள் செயல்களை விரவூரவர் தெரிவுறலாகிப்
பிளைமார் கடிவதின் மகிழ்வாயுறு மிவர் பிறழ்வானர முனமொனவே கொண்
டளைவார திசய மிவர் காலையின கரையம்பெற வருவது கண்டோர்
இளையானிவன்வயதிரு பானைந்துளனெனவஞே மிகவெழிலினிதுள்ளான். (ருசஉ)

இந்தச் சிறுவயதிடையே பித்திசை வினவுயினனியல்வுறு ஜன்மம்
பந்தச் சிதைவது படலாயின தொரு பயனற்றென விகழ்பலபேச
முந்தக்கடி நகரிடையே பதினொரு முன்றிற்பெரு வனமுறையே கொண்
டிந்தப்படி திரியொரு நாளிடை யடையொரு மூன்றட்டனரிசைவாக. (ருசங)

அப்போதர சிவரைத் தேடிப் புடையணுகிக் கண்டடிகளில் வீழ்ந்து
செப்போகை யினுற மெய்த்தேசிகர் திருமாலுக் கோரடை சேர்வித்துத்
தப்போவியவடைதா மொன்றுண்டர சற்கோரடை தரவதுகொண்டான்[முன்
கைப்போதிடை கொடுதுய்த்தானள வறுகளிகொண்டருள் விடைகொடு சென்

இந்தப் பித்தனனுக்கிரகம் பெற்றனனேயிறை யென வெல்லோரும்
தொந்தத் திகழ்வுறலானுர் ஙனிசிறு சுதரோடுற விரவினர் வாயால்
அந்தத் தசரதசுதனுமஞ் சொலலொழியார் ஙனி விளையாடிச்சார்
சந்தப்பொழிலிடை யொருவன் னெறிகனுதன் மேலடிபடலுஞ் சோர்ந்தார். ()

தறைமேல் வீழ்ந்துயிர் போனர் போல்வது தனையச்சிறுவர் கடாந்தேர் வுற்
றிறையேனும் முயிரிலதே நாசியிலெனவே வெருவினரிது தேர்ந்தால்
முறைசேர் நகரதிகாரன் றெறுகுவன் முனிவாய் நமையென முனல் செய்து
குறையா நதி மணலிடையே கொடுகுழி பறியாவதின் முழுகுதல் செய்தார். ()

குழியிற் புகவிவர்தமை மூடினர் செலவிறையோனருள் குருபரர் நாடிப்
பொழிலிற்குகை செறிமலையிற் பிறபல புடையிற் கண்டிலன் வருபோதில்
வழியிற் பதிகனாவின வுற்றிடவவர் யாரோமாயதிதனை நந்தர்
சுழியிற் செறிகண நதியிற்றுறு மணலிடையிற்றுன மறைதொழில் செய்தார். ()

எனவே யெங்கெனலும் மாவுலி நகரிடையே யென்றனரது கேளா
வனமோவினன் வருபொழுதூர் தனிலுளர் மகரால்விளை தொழிலது தேர்ந்து
மனமேய் வெருவுடனெழு நாள் கழிவுறு ஈவலூளெரியிடைவதை செய்து
புனலேய்வது பொடிபுரிவோ முறையிறை புகுமுன்னிது புரியோமானுல். ( )

தண்டம் பெறுது மிவரசாலென்றனர் தாம் யாவரு மறைவுற வந்து
மண்டம் மணலது தோண்டித் திருவடி வங்காண் பொழுதவர் மலிசத்தம்
கொண்டங்கெழுவது கொண்டோடினர் செறிகொடுமோவனமொலிகுரல்கேளா
விண்டங்குயிரிலர்போன் மூர்ச்சித்து விழுந்தார் தேறினர் மீண்டம்மா. (௩௪௯)

எழுநாளளவுறு மணலுட் புக்கவ னிறவான திருமி வொலியேதோ
வழுவாவிவனெவ னெனவே யதிசய மருவித் திருவவ தாரஞ்செய்
முழுவான வனிவனெனவே கினர்நகர் முந்துற்றூர் சிலர் முடுகிப் போய்த்
தொழுதாரிறை வனையொருதே சிகரும் வனமீதென்று சொலக்கேட்டான். ()

அரசன்களிகொடு தாயைத் துருவுறு மொருகன் றெனவவ ரகமேகிப்
பரசும் பரிவுட னடிசேவித் தவைபற்றிக் கொடுகுரு பரநாதா
விரசும் புனையில் விநாசா பக்தபரோ சாகதிதரு விமலாவென்
றுனை செய்திரு விழியுகு நீரிருபத முறுவித்துக் கழுவுதல்செய்தான் (௩௫௧)

உடனே யவனை யெடுத்தாகம் பதிவுறவே தழுவின ருறல் செய்தார்
திடமேவிய குருவரசன் சிறுவர்கள் செயன் மேவியது முணர்ந்தான் முன்
விடமேவினர் சொலவ திகந்தனதுள் வியந்தா னவர்சொலும் விடைகொண்டு
கடமே வுறவ முதட்டுத் தேசிக ருண்டே மிகுவது கடிதுண்டான். (௩௫௨)

சுருள் செய்தடையொடு பாகுந்தந்தடி தொழுதுன்ன கருறுகெனவேண்டக்
கருதும் படிவரு நாளுண்டன் றுனகர்க் கண்வருவெ னெனைத்தேடிப்
பெருகுந் துயரொழு நாளுற்றனை யதனாலே குதிநகர் பிறழாதென்
றருளும் விடைகொடு சென்றான கரரசன் றுனிவர் வனமணு குற்றார். (௩௫௩)

அணுகுந் தினமதிலேதத்து வெனுமொரம் பட்டன் னவரரு குற்று
நணுகும் பவம் வினைபல பாசங்களு நாசஞ் செய்தொரு தனியேனுய்
நுணுகும் பொருளுணர் குருசேவை யிலுற நுனித்தெய்தின னடியே னென்று
கணுகும் புனலுற வடிசேவித் தெதிர் நின்றா னினைவது கண்டாராய். (௩௫௪)

சிலநாள் கழிவுற லாகத் தந்தனர் தீக்ஷைத் திருமகள் கோனமும்
பலகாலும் பயிலுறுமா செய்தன ரவனவ்வாறு படிந்துற்றான்
நலனோர் தருமவனொடு சாதாருற நாடிக் கூயினர் கொடு சென்றேய்
தலனோர் கோசுறு புறமார் நலபுன றனிலாடினர் பலிதான் செய்தார். (௩௫௫)

திருமால் பூசனை செய்போதுடன் வருவோன் மிக்கது பசிதீர்தற்காம்
அருகார் சோளம தெனவே பிறர் பொருளாகா தென்றன ரதுகேளான்
சுருளார் கதிர்க ளொடித்தான் சிலகொடு நன்னிச் சுட்டன னுறுபோதில்
பெருகார் பயிருடையவ னேக்கிக் கடிதுற்றான் வாய்வரு படிபேசி. (௩௫௬)

கையிற் கொடுவரு கோலாற் சுடுகிற கள்ளன்றனை யுமவன்றன்னைக்
கொய்யப் புகவிடு வோனென்ற ரிபலிகொண் டிற்றோனையு னிசாடி
மெய்யிற் புடையுறவே செய்தேகினன் விமலத் தேசிகர் நகை செய்தார்
உய்யப் புகுமொரு தத்துக் குருபரருக் குற்றதினு முறகொந்தான். (௩௫௭)

தத்துப் படுதுயர் கண்டோர குபதிதா சரனவரவன் முகநோக்கிக்
கொத்துத் துளவின னன்பர்க்கின் பொடுதுன்புஞ் சரியன கொல்லைக்கண்
முத்துக் கதிர்க ளொடிக்கும் போதுள சுகமே யுடையவன் மோதும்போ
தெத்துக் கித்துயர் படுகின்றா யெனவெதிர் நின்றடி தொழுதிது சொன்னன்.(

ஒடித்தே னடிபட வுறுநீரடி படவுறு மோகுருபரரோ யென்ன
நொடித்தாரிச் செயல்யார்க்குந் தெரிவுற நுவலாதமை கெனவேதாசர்
தொடித் தோளரசனில் விடுத்தேதரு வுறுதூதர்க் கவணிவருற நேர்ந்து
படித்தாரர சிடையொரு கோசுறு வழிபரதேசி கரணுகின னொன்றே. (௩௱௫௯)

வினவிக்களி கொடுவேந்தன் புரமணிகென வேவிப்படை புடைசூழத்
துனமொய்த்திய வெஃகிதுள்ளப் புரவெளி துன்னிச் சற்குரு பதசேவை
நனருற்ற வரையொர் சிவிகைப் புறமுற நகருய்த்தனன் வலம் வரலாகக்
கனமெய்க் கவரிக ளிருபான் மந்திரிகளுடன் முனுமொர் கைவீசி. (௩௱௬0)

செறிகோ யிலினக முறவுய்த்தங் கொருசிங்காதன மீசையுற வைத்துக்
குறிசோட சவுபசாரத் தொடுபத பூசைத்தொழில் குறைவறமுற்றி
நெறிமாமறை யவரொடு போஜனமுண நிகழ்வித்துறு மிகைதானுண்டான்
அறிதே சிகர்கொள வணிகோசிக முடனடைகாய் சந்தலர் பிறதந்தான். (௩௱௬௧)

கூடப்புகு மொருதத்துத் தனையக மாகக் கொடுதனி முகநோக்கித்
தேடற் கருமடிகளின் வெந்துற்றதடிப் பேதுள செயல் செப்பென்ன
நீடச் செயல் வெளிசெய்யே லென்றருள் குருவுக்கஞ்சி நிகழ்த்தானுய்
வாடப்புரவல னுளதோ தாயெனில் வாழேனுயிர் விடுவே னென்முன். (௩௱௬௨)

மன்னல் லுயிர் விடுதற்கஞ்சின னுளதோதத்தெரி புரவலனந்தச்
சென்னல் விளைவு செய்வோனிற் சினமுடன வனைத்தூதரில் வரவேவித்
துன்னல் விடைரகுபதி கீர்த்தனகதை சொல்லக் கேட்டன னுறைபோதில்
முன்னல் விடைகொடு சென்றோரவனை முனிந்தாத்தனர் கொடுமுன் வந்தார்.

வரல் கண்டவனையொர் சிறைதங்கிட விடுமென்முன் விழிவழி மறவேந்தன்
குரல் கொண்டதி னெறிகுடியான வனிவனெனவே தெரிகுருபரசாமி
முரல் கொண்டவனை யழைக்கப் புரவலன் முகநோக்கினர் மொழிதர வேந்தன்
நரல் கெண்டுளவ வைவரல் செய்தன னவனைக் கட்டுறுதளை நசழ்வித்தே. (௩௱௬௪)

இறைபோர்த் துறவியலுஞ் சாலுவைதனை யீந்தங் கவனது கொல்லைக்குற்
றிறை தீர்த்தரு ளிதிவேந்தே யென்றன ரிறையு மப்படியே செய்தான்
குறைபோர்த் துறுகிற கொல்லைக் காரனை நோக்கிக் குருபரரினி நீயுன்
தறைபோற்றிக் கொடுசெந்தோஷத் தொடுதழை போவென்றனர் சபைதன்னில்

நிருபன் பால்விடை பெற்றின்று யிருய நேர்ந்தே னெனமன மகிழ்வாகிப்
பெருகுங் கடிமனை சென்முனவை நிறைபெரியோரொடு சகலரு நோக்கிக்
குருபுங்கவரதுகுண நன்றெனை மகிழ்கொண்டோ தினர்புகழ் தினமூன்று
கருதும் புரவலனக மேவினர் நிசிகண்டேதத் தொடுகொடுற்றார். (௩௱௬௬)

வேறு.

விடியல் காண்டலும் வேந்தருள் குருபரர் மேய
படியை நோக்கின னுடையா பரணங்கள் பார்த்தான்
செடிகொ ணீள்பொழில் சென்றவ னெனத்தெரிந் தெங்கும்
கடிதி னுடினன் கண்டன னுருபுடை காட்டில். (௩௱௬௭)

கண்டு தாழ்ந்தடி பூசித்து நின்ற காவலனை
மண்டு பேரரு ளொடுவதனந் தனைநோக்கித்
தொண்டுசேர் திரியம்பகம் போய்வரத் துணிந்தேன்.
வண்டுவாழ் தொங்கலா யெனவவனுடன் வருவேன். (௩௱௬௮)

என்றுரைத்தன னரச நீயென்னுடன் கூடி
ஒன்றுறத்தகா தவிந்தர்தமிடுக்குள தூங்குத்
துன்றுறத் தருங்கலக மாதலிற் ருெடரரசு
நன்றுறப் புரிந்திருக்கென நவின்றனர் பின்னும். (௱௬௬)

உத்தமத்தலங் களிலுள புனிதருக்குதவ
வித்தம் வேண்டுநீ நல்கென வேந்தனெட்டகமா
மத்தகக் கரிவாசி மேன்மாடுக ணிரப்பி
மெத்த வாடை நல்லணி படை வேண்டுவ வெல்லாம். (௱௭0)

தந்து தாழ்ந்தவர் தமைவிட்டுப் பிரிவுறத் தளர்ந்தான்
நொந்துவாடலை யான்சென்று வரும்வரை நுடங்கா
வந்து மாமகன்றனைத் தினம் பூசித்து வழுத்தி
முந்து சூரிய குலத்திராமனை மனமுன்னி (௱௭௧)

தினமுமன்ன முண்டுறைக நீயென்றுறச் செய்து
மன னமாமறை யவரொடு வழிக்கொண்டு சென்ருர்
தனது கோயில் போய்ச் சார்ந்தனன் வேந்தனுந் தாழ்ந்து
வனச மாமலர யனைநேர் மாதவர் வழியில் (௱௭௨)

வேந்து நல்கிய பொருளின் வேதியர்க் குறுவிளைத்துப்
போந்து செய்வன செய்துதாம் பிச்சையே புசித்து
வாய்ந்த சேர்திரி யம்பக மென்னு மூர்வந்து
தேர்ந்து தானமுந் தருமமுஞ் செய்தனர் செய்ய- (௱௭௩)

அங்கு வாழ்மறை யவரிவர்தம் வயினணுகி
இங்கு நீர்வ பனஞ் செய்து கொண்மி னென்றிசைப்பப்
பொங்கு மாதவர் செய்து கொள்ளா தரிபுகழே
தங்கு மில்லிடைச் செய்து கொண்டிருந்தனர் சார்நாள். (௱௭௪)

ஒருதினத்தினிற் றத்துவோடுறு விளையாடல்
கருதியங்கவன் குறிவைக்க மற்றதைக் கல்லால்
பொருதி ஞரதைக் கண்டவர் யாவரும் புகழ்ந்தார்
தருதிறக்குறி தப்புறு தடித்தன ரொன்று. (௱௭௫)

பின்னு மற்ருெரு கற்கொடோர் பக்ஷிபோராமல்
உன்னிவீசின ரஃதெறி பட்டுடன் வீழத்
துன்னும் வேதியர் தம்மை நோக்கினரிது சோர
முன்னிவீழ்த்தினன் காண்மி னென்றுற முறுவலித்தார், (௱௭௬)

கண்டவேதிய ரிறையுநேர் ஜீவகாருணியம்
கொண்டிலாதெதிர் கொன்றன னீக்கொலை யோனை
அண்டி நாமகா புருடனென் றறைவ தெப்படியோ
மீண்டு கொண்டவ னிவனெனப் பலபடி வெறுத்தார் (௱௭௭)

தாசர் பக்ஷியைக் கைக்கொடு சதுமறை யவரோ
நேசமின்றியா னெறிந்திதைக் கொன்றன னீவிர்
மாசகன்றமெய்ஞ் ஞானத் தீர் புண்ணிய வழியீர்
பாசமிக்குளீ ராதலா லிறந்த பக்ஷியின்மேல். (௱௭௮)

பரிவுசெய்துநும் புண்ணியத்திற் சிலபகுத்துத்
தருவிரேலிது பிழைக்கு நுங்கட் கறஞ்சாரும்
கருதுரு தெறியெனக்கும் வெம்பவங் கைவாகும்
புரிதி சொன்றனர் கேட்டந் தமறையவர் புகல்வார். (௩எக)

இறந்ததைப் பிழைக்கச் செயராமற்கு மியலா
தறந் தழைத்துளே மாயினு மெங்களாலாமோ
பறந்த புள்ளை வீணேகொன்ற பதகனே யென்னச்
சிறந்த தாசர் ஸ்ரீ ராமனுற் செயத்தகா துளதோ. (௩அ0)

ராமநாம நன்மகிமையைக் காண்மென நவின்று
தாமங்கைக் கொண்ட பக்ஷியை விடவுயிர் தழைத்துப்
போம தாயதுகண்டனர் பூசுரர் வியந்து
நேம நீடவதாரி மற்றிவனென நினைத்தார். (௩அ௧)

இவனை ராமதா சென்பதற்கைய மின்றென்று
அவர் தஞ்சேவடி பணிந்தன ரன்பொடு துதித்தார்
எவரு நேரிலா ரங்கொரு திங்கள் காறிருந்து
பவர்நெடுஞ் சினைப்பஞ் சவடித் தலம் படர்ந்தார். (௩அ௨)

ஆங்கிராமனைக் கண்டடி பணிந்தெழுந்தன்பு
தாங்கியே பதினுறுப சாரமுஞ் சாரத்
தேங்கு பூசனை செய்தறம்பற் பலசெய்தார்
ஓங்கு வேதியர்க் கோதன மிட்டனரு வந்தார். (௩அ௩)

அன்றி ராத்திரி ராமகீர்த்தனம் புரியளவில்
வென்றி ராமனுக் கின்புமிக் கின்னுரு மேவி
நின்றி யாவர்க்குந் தெரிவுரு தவனை நேரணைத்து
நன்றி நேரித வசனங் கனவின்றுடன் மறைந்தான். (௩அ௪)

அனகர் பின்பு செய்தவம் ஜபமாதிய யாவும்
ஜனகி நாயக ஞமசங் கீர்த்தனந் தனிலும்
கனம் விராவியதல்ல நஞ்சுண்டவன் கங்கைப்
புனனிலாத்தலை பொருந்தியுந் தாபம் போக்கிலனுய். (௩அ௫)

தசர தன்றிருத் தனைய ஞமஞ் சொலித்தாபம்
பிசக தாயுற விளங்குகின்றன னன்பு பெருகி
நிசமிதே யெனத்தெரிமி னென்றி யாவர்க்கு நிகழ்த்த
வசம தாயினர் யாவரும் ராம நாமத்தில். (௩அ௬)

நயன நீருக ராம நாமந்தனை நவின்று
ஜயஜயா வெனத்தழைத்துற ராமன் மெய்த்தாசர்
புயலை நேர்திரு மேனியாற் காரதி பொருத்தி
வியனுறும் பிரசாத மீந்தனர் விடிவேலை. (௩அ௭)

ஆழியான் றிருமகனுக் கட்டாங்க வந்தனைசெய்
தாழியூழி நீவாழி யென்றுறு விடைபெற்றுப்
பாழிசேர னிகத்தொடு டாங்களி படர
வாழியென்ற வூராரொடுத் தவர்வணங்கினரோ. (௩அ௮)

கூடவந்தவர் படாநெடுங் குடிலுறத் தாசர்
நீடமர்ந்தவூர் புக்கிடு பிச்சையை நேர்ந்து
தேடருந் திறலனு மனைப்பூசித்துத் திருந்தோர்
மாடமைந்தடை சுட்டிராமனுக்கு முன்வழங்கி. (ராஅகூ)

வேதியர்க் கமுத ருத்தித் தாமும் பின்பு மிசைந்து
நீதியிற்றிரு நாம சங்கீர்த்தன நிசியில்
ஓதிமுத்தின முற்றடைந் தவர்க்குப தேசம்
தீதிறப் புரிந்தெய்து வார்தாய்தந்தை சேரூர். (ராகூ0)

கங்கைமா நதிக்கரைவழி ஜாம்பெனக் கழறூர்க்
கங்கணோர் புடைய ணிகத்தோடி ரங்கினராகத்
தங்கு மந்நகர்த் தலைவரும் ஜனங்களுந் தெரிந்து
நங்கள் வேந்து சிவாஜி தேசிகர் நண்ணினரோல். (ராகூக)

நாமெதிர்ந்து கண்டினிது பூசித்தருணண்ணல்
தாமன்றே செயத்தகுவ தென்றெழுந்தனர் சார்ந்து
மாமன்றே சிகரடிக்குக் காணிக்கைகள் வைத்துத்
தூமனங்கொடு தொழுதனர் தூரத்தே நின்றார். (ராகூ௨

நோக்கி ராமதாசனை யிவர் நுதன் மருவுடையார்
போக்கில் சூரியாஜிபண்டிதர் புத்திர ரலரோ
தூக்கில் யாரெனத் துணிவுறு போதொரு பார்ப்பான்
நீக்கி யாரையுங் கிட்டிவந்தரு குறநின்று. (ராகூ௩

வேந்தன்றே சிகராயினு நீரெவண்மேவி
வாழ்ந்துளீ ரெங்குப் போகின்றீ ரெனவருள் வடிவர்
சார்ந்துளேன் பஞ்சவடி யெனுந் தலத்துளே னும்மை
நேர்ந்து காண வென்றனர் குறுமுறுவன் முன்னிலவ. (ராகூ௪

சொல்ல வேதியன் சூரியாஜிபண்டிதர் தோன்றல்
அல்லவோ வருநீவிர் நாராயணசாமிச்
செல்வ ரென்றறிந்தே னெனவவர் சிரித்திருந்தார்
வல்லதாய் தந்தைவரப்புரிவே னென்றான் மறையோன். (0கூரு

வினவு தாச ரென்றந்தை தாயென் வயின்மேவல்
கனமதன்றி யானேசென்று காண்பதே கருமம்
எனவெழுந்தனர் கானடையாய்ச் செலவி வர்க்கு
முனர் விரைந்த வூர்த்தலைவன் போய்தந்தைக்கு மொழிந்தான். (ராகூசு

இளைய புத்திர ரெய்தின ரென்னலு மின்பம்
அளையு முள்ளத் தராய்த் தந்தை தாயுடனவசம்
திளைவ தாயின ரப்பொழு தெய்தினர் சேனை
வளையவிற் புகுந்தார் தமையரை முன்புவணங்க. (ராகூ௭

தாசர் நும்மை யத்தமையனார் மார்புறத் தழுவி
ஆசிகூறிட வன்னைதாள் வணங்கின ரன்னை
நேச நீடமார் புறவணைத் திருகண்ணி னீரால்
மாசின் மஞ்சன மாட்டினள் முகங்கண்டு மைந்தா (ராகூ௮

எனைமறந்து நீயித்தனை நாளெவணி ருந்தாய்
புனைவ தாயினை புகரில் கோசாயி வேடத்தை
நினைவதென் கொலோ வெனமிக விரங்கின ணிற்கத்
தனையர் தந்தையை வணங்கினர் தழுவினர் தந்தை. (௱௯௯)

ஈகூறின ரன்புறத் தந்தைதா யண்ணர்
மூசி நின்றுதம் வயினன்பு மொய்ப்பது தெரிந்து
மாசிலாதவர் மூவர்க்கு முள்ளமா மயலை
வீசினார பங்கங்கள் பற்பல முனர்விளம்பி. (௨௱)

மூவருந் தெரிந்தீங்கி வனங்குல முழுதும்
தாவரும் புவிதன்னிலீ டேற்றிடச் சார்ந்தான்
மேவருஞ் செயலா னெனமகிழ்ந் துள்ளம் வியந்தார்
யாவரும் புகழத்தக் கோர்பிக்ஷைக் கெய்தினரோ. (௨௱௧)

ஆறுமைந்து மாமனை யிடை யேற்றன ராகி
மாறுகொண்டிலர் தம்மனை வருதலுங் கண்டோர்
வீறுசேர் புவிவேந்தற்குக் குருவென வமைந்தும்
ஆறுபிச்சை யூண்மிசைவதே துணிந்தனர் துணிவோ. (௨௱௨)

கடினமாவ யிராக்கிய மெனவன் புகலந்து
முடிவிரூத்திர மொழிந்தனராக முன்றந்தை
மடிவின் மாமறை யவருண வோதனம் வழங்கி
நெடிது தக்கணையோடு தாம்பூலமு நிறைத்தார். (௨௱௩)

பிள்ளையான மற்றி ருவரோடுண்டனர் பின்பு
கொள்ளை யானந்த மேவின ரிருப்புழிக் குறைவில்
புள்ளையூர் பவன்ருசர் சாத்தார் புகப்போதத்
தள்ளை தந்தையோ டண்ணருந் தாசரை நோக்கி. (௨௱௪)

யாமு நின்வயினன் புடையரசனை நோக்கப்
போமுன் பின்வருவோமென நன்றென்று புனிதர்
தாமும் பன்மிசை யண்ணரைத் தந்தையை யேற்றி
பூமுன் மங்கையைப் பொருவுதாய் சிவிகை மேற்பொருந்த. (௨௱௫)

கொண்டு மூவர்க்குஞ் சேவை செய்தனி கத்திற் கூடி
மண்டு நீர்வளங் கெழுமுசா தார்புறம் வாய்ந்தார்
அண்டு தூதரா லறிந்து வேந்தனிகத்தோ டெதிர்ந்து
கண்டு கொண்டடி பணிந்தனன் பூசித்தான் களித்து. (௨௱௬)

தந்தை தாயண்ணர் தம்மையுந் தாழ்ந்தன னின்று
முந்து நற்றின மாதலா னும்முக நோக்க
வந்ததென்னுடை நற்றவ மென்றனன் வழுத்தி
மைந்தர் தம்மையோர் சிவிகைமே லேற்றினன் வந்தான். (௨௱௭)

சாமரங்கொடு வீசின னகர்வலந் தந்து
காமரங்கனிந் திசைதரப் பல்லியங் கறங்கப்
பூமடந்தைநேர் மங்கையர் பொலிவுடன் வாழ்த்த
மாமடங்கலில் கோயிலுட் கொணர்ந்தனன் மகிழ்ந்து. (௨௱௮)

அயினி நீர்கொடு சுழற்றிப்பின் போர்புறத்தமைத்த
வயினகன்றசிங் காதனமேற்றினன் வைத்து
மையின் மணிக்கலம் பூட்டிநல் வஸ்திரம் வனைந்து
கையினியற்றின னெண்ணிருமுகமனுங் கனிவாய். (உ௱கூ

மறையவர்க்கு நால்வருக்கு மின்போஜனம் வழங்கிக்
குறைவி லுத்தமருண்ட வூண்மிச்சி லுட்கொண்டு
முறையி னண்ணவை யிராக்கதை மொழிந்திடச் செய்தான்
நிறையும் யாவருங் கேட்டுள மகிழ்ந்தனர் நிரம்ப. (உ௱ய)

பின்னர் சாமிக் காரதி செய்தபின் பிரசாதம்
நன்னர் யாவர்க்குந் தரவவர் வாய்ந்துபோ யினபின்
முன்னரோடுதாய் தந்தைகண் முகிழ்த்தினி துறங்கச்
சொன்ன ராமதாசருக் குபசாரந் தான்றெருத்து. (உகக)

துயிலச்செய்தன னிவ்வகை யொருமதிதுன்னப்
பயிலுமற்புத தாசர்பார்த்திபன் றனைப்பார்த்துன்
வயினிற் சார்ந்தவென் றந்தையோ டண்ணர்மாதாவை
எயில் சுற்றோங்கிய ஜாம்புறச் செய்தியின் றென்றார். (உகஉ)

ஏந்தல் கேட்டுடன் வஸ்திர பூஷண மேமம்
வாய்ந்த நால்வகைச் சேனைமற் றுதியவழங்கி
நேர்ந்த ஜாம்பெனு மூரைநற் கொடையதாய் நிரப்பிப்
போந்தமூவர்க்கு மினிதுநன் முகமனும் புகன்று. (உகரு)

சூரியாஜி பண்டிதரது துணைவியார் தம்மை
நேரி னோக்கி யாவரு நிகர்க் கின்றிலீர் நீரோ
பாரினோர் பராந்துருவைப் பிரகலாதனைமா
சீரின் மேம்படலாகிய திறலனுமானை. (உகச)

பெறுசு நீ திகியாதிசீ ரஞ்சனை யெனப்பேர்
மறுவிலாரொன ராமதாசனை வயின்வாய்த்தீர்
நிறுவி யெவ்வுலகையு முத்தரித் தருணிமித்தம்
தெறுவி றெவ்வினையையு மெனத்துதிபல செப்பி. (உகரு)

தீர்க்க வந்தனஞ்செய்தவ ராசிகள் செப்ப
ஊர்க்கண் மேவுற வழிவிட்டு வந்தன னுரவோர்
யார்க்குந் தேர்வுறு தேகினர் தத்து வோடியல் கான்
சேர்க்குமாடையா பரணங்க ளவ்வயிற் றீர்ந்து. (உகசு

அரசு வேதியர்க் கருத்துபோ துண்டவந்தணன்மா
விரசுமாவுலி யென்னுமூர் மேவும் வெள்ளறிவன்
பரசுமூணனி யுண்பவ னக்கரம் பயிலான்
உரசு காதன்மிக் குள்ளவன் மணம்பெறு வொருவன். (உகஎ

இம்மண் ணாள்பவன் றனக்குத்தே சிகரொன வியைந்தோர்
தம்மிடத்துப தேசம்பெற் றுலது தன்னால்
செம்மையாகிய போனகஞ் சித்திக்கு மரசன்
மெய்ம்மை சேர்நண்பு மேவிப்பொன் னீட்டலு மேவும். (உக

என்று நிச்சயித் திராமதா சிருப்பிடந்தேடித்
துன்று வோன்புலி கரடிகள் சூழ்வுற நாப்பண்
ஒன்று வோர்தமைக் கண்டன னருகுற வொல்கி
நின்று தூரத்திற் றேத்திரம் பற்பல நிகழ்த்த. (௨௧௯)

தெரிந்து தேசிக ரந்தண பயப்படேல் சேர்தி
புரிந்த வென்னுழை யெனவவன் போய்ப்பதம் போற்றப்
பரிந்துதேசிகர் வந்ததென் பகர்தியென்னலுஞ்சீர்
விரிந்த நும்மருள் பெறவிங்கு மேவினே னென்றான். (௨௨௰)

எனலு மென்னரு ளாலுனக் கென்வரு மென்றார்
அனகர் நல்லவூ ணுடையா பரணங்களாதி
தனமு நும்மரு டருமிவை யின்றியான் றளர்ந்தேன்
தினமு மென்றனன் றேசிகர் சிரித்துபதேசம். (௨௨௧)

பெறற்குத் தக்கவ னல்ல னென்றுளங் கொண்டு பெயரத்
துறக்கமற்றவ னீருப தேசஞ்சொல் லீரேல்
இறப்ப னீங்கெனத் தேசிக ரிவன்கொடு மூர்க்கன்
மறத்தி னுவியை நீக்கினு நீக்குவான் வல்லே. (௨௨௨)

என்று நிச்சயித் துடனவற் கிதவுப தேசம்
ஒன்றநல்கி மற்றவன் றனைநோக்கி யொன்றுரைப்பார்
இன்றுதொட்டவா விகந்தின்ப துன்பங்க ளெதிர்ந்தால்
நன்றுதீதென நாடுறா துயிர்கட்கு நலனாய். (௨௨௩)

சாது சஜ்ஜனர் தமக்கன்பு செய்து நாடோறும்
போது போதுறு காலத்திற் புனிதநீராடித்
தீதுறாநிய மத்துடன் பதிநேரிற் சேர்ந்து
கோது தீர்பிச்சை கொண்டதி லதிதிக்குங் கொடுத்து. (௨௨௪)

அட்டிராமனைப் பூசித்து நிவேதன மமைத்து
மட்டிலிந்தநன் மந்திரந்தனை மனனஞ் செய்
துட்ட தும்பிடா துண்டுறி லிவ்வுபதேசம்
இட்டமாகிய பலந்தருந் தவிரிலீ யாதால். (௨௨௫

என நன்றென்றவ னிருப்புழித் தாம்பிச்சை யேற்றுத்
தினமுஞ் செய்முறை செய்துண்டு சேர்ந்த தத்துவுக்கும்
அனகரீந்தன ரன்புட னருந்தின னிருக்க
உனலருந்திறல் வேந்தன் வந்துற்றன னூங்கு. (௨௨௬)

தேசி கோத்தமர் தமதடி பூசித்துத் திருந்து
நேசமோடு கொண்டு வந்த நல்லுண வெலா நிறைக்க
மாசிலாத வருண்டு பின் மிகுந்ததை வனத்தில்
மூசுவானரங்களுக் களித்துறு முதல் வனுக்கு. (௨௨௭)

தாமுனட்ட வப்பத்தின் மிச்சிலைத் தரத்தாங்கிக்
கோமுனுண்டு தன்னகர் சென்றான் குருவருள் கொண்டு
போமுன் கண்டங்குத்தங்கிய வேதியன் பொருமி
நாமுன் கண்டதின்றிவ் வதிசய மென நாடி. (௨௨௮)

உப்பிலப் பத்தின் யிச்சிலா மெச்சிலே யுண்டான்
ஒப்பில் வேந்தனே யென்னில் யாம் பெறுவது முதுவே
தப்பிலாவி வரருளுபதேசந்தான்றருமோ
வைப்பினற் பயனென்றகம் வருந்தினனுகி. (உ௨க)

மூன்று நாளுணவுறக்க மின்றுயிவண் முயன்றால்
ஊன்று வெம்பசி யாலுயிர்போ மென வுன்னி
ஞான்று தோறுமை யம்புக்கு நலிவுற நம்மால்
என்று முற்று மோவிது தகாதென்று தேசிகர் பால். (உ௩0)

நின்று நானயலூர் செல நினைக்கின்றே னீவிர்
ஒன்று மிவ்விடத்துற மனமுறுகிலே னென்ன
நன்று நீயெனதுரைப்படி நடத்தி போ வென்றார்
அன்று தேசிகரவன் வணங்கினன் சென்றான கன்று. (உ௩க)

வேறு

எங்கு நல்லுணவு வாய்க்கு மென விசாரித்துக் கொண்டு
மங்குவான் போகக்கண்ட மற்ற வனவனை நோக்கித்
தங்கு மிவ்வூருள்ளார்க்குத் தலைவன்றன் வீட்டில் ஞானம்
பொங்கு மோர் புருடனுக்குப் போனகம் வழங்கு கினறான். (உ௩உ)

அவன்மனை தனினீ சென்றாலறு சுவைச்சோறு வாய்க்கும்
தவமறை யவனே சேறி யெனலுமம்மனைக் குட்சார்ந்து
பவருற நிறைவதான பந்தியிலிருந்துண்டின்புற்
றிவர் பெரியவரோ வாய்த்த வின்றுதான் சுதின மென்று. (உ௩௩)

இந்த மாபுருடர் தம்பாலினிதுபதேசம் பெற்றால்
எந்த நாளினு நல்லுண்டி யிசையு மென்றெண்ணி யாங்கு
வந்த மாபுருடர் தம்மை வணங்கி நன்குபதேசத்தைத்
தந்தருள் செய்தி ரென்றான வருநீதான் யாரென்றார். (உ௩௪)

இல்லற மெனக்கின்றிந்த மாவுலியிருப்பதி யானே
நல்ல முதகப்படா மனர பதிதனதாசானல்
சொல்லனுக் கிரகம்பெற்றாற் சுவையுணக் கிடைக்குந் துய்த்திங்
கல்லலற் றிருக்கலாமென் றவரனுக் கிரகம் பெற்றேன். (உ௩௫)

வனத்தவ ரிருந்துபிச்சை வாங்கிவந் துப்பிலப்பம்
கனத்தவெம் பசிதீர்தற்குக் கால்வயி றுண்டுகாலம்
தனைக்கழிக் கின்றானன்னோர் தம்மொடு கூடிவாழ
எனக்கிசை யாமல்யானும் மிடஞ்சர ணடைந்தேனென்றான். (உ௩௬)

என்பதை வினவியந்த யதியிந்த உலகத்துள்ள
மன்பதை தமையீடேற்ற மாருதி யம்சராகி
இன்புசெய் திறைவனுக்கு மெவர்க்குந்தே சிகரானோர்பால்
அன்பனுக் கிரகம்பெற்று மிவன்வினை யழித்ததந்தோ (உ௩௭)

எனநினைந் தவனைநோக்கி யொருவர்பா லிதோபதேசம்
தனையடைந் தனைவேறேயோர் தவருப தேசங்கொள்ள
நினைவுற லடாததாகு நினக்கவ ருபதேசித்த
அனையது தனையேபோற்ற லழகிதென் றறைந்தா ரன்னோன். (உ௩௮)

அவ்வுப தேசந்தன்னுற் பட்டினி கிடக்கலாற்றேன்
செவ்வியீர் நீரோனக்கு செபுமுப தேசமென்முன்
வெவ்வினை யவனன்னுனைத் தம்வயின் விலக்கவேண்டி
வவ்விய வுபதேசத்தை வழங்கினேர் வயின்வழங்கி (உ௩௧)

வருகவென் றுரைத்தாரந்த மாதவர் மறையோன்கேட்டுப்
பொருவறு ராமதாச ருறைவனம் புகுந்துகண்டு
பெருகநல் லுணவுநல்கும் பெரியதே சிகரைப் பெற்றேன்
அருளுறும் முபதேசத்தைக் கொடுவிடை யருளுகென்முன். (உ௪0)

கேட்டவர் நன்முயிற்றிங் குன்னைப்போற் கிளருஞ்சீடர்
நாட்டகப் படுவரோவுன் வாயிடை நன்னீர்பெய்து
கூட்டிய புனலைக்கொண்டு கொப்புளித் துமிழ்கவென்முர்
ஊட்டின னீரைவாயிற் கொப்புளித் துடனுமிழ்ந்தான். (உ௪௧)

உமிழ்தலும் பாறைமீதி லவருபதேசஞ்செய்த
அமிழ்தினுஞ் சுவையதான வக்கர மேழுமாறும்
கமழ்தர லாகிக்கன்மேற் காந்தின வெவருங்காண
இமிழ்திரை யுலகத்தின்று மினியிட்டப் படிசெல்கென்முர். (உ௪உ)

தாசரோ வுதலுங்கேட்டுச் சார்ந்தனன் சாப்பாடிட்ட
பூசுரர் தம்பானின்று புகுந்தவ புகன்முன்கேட்டு
மாசில ரந்தோராம தாசர்மந் திரத்தைவாயின்
வீசினை யதனையன்றி வேறிலை யெனதகத்தும். (உ௪௩)

குருவுப தேசந்தன்னைக் கொப்புளித் துமிழ்ந்தநீசா
அருகுறே லகறியென்ன வகத்துற முனிந்தார் பார்ப்பான்
பெருகவும் பயந்துநில்லா தகன்றனன் பெயர்ந்துபோனுன்
கருதரு ராமதாசர் காட்டிற்சஞ் சரிக்குநாளில் (உ௪௪)

அங்குப்பண் டரிக்குப்போகும் யாத்திரைக் காரரண்மித்
தங்குறப் படாநல்வீடு தழைப்பச்செய் திறங்கியன்று
கங்குலிற் றுகாராம்சாமி கழறபங் கங்களாலே
பொங்குபண் டரியென்றேறும் புரத்தது மகிமையெல்லாம். (உ௪௫)

தாளமிர் தங்கம்வீணை தழைப்பக்காற் சதங்கையார்ப்ப
நீளரவத் தோடாடிப் பாடினர் நிரம்பக்கண்டு
கேளமை நல்லீர்யாண்டுச் செல்கின்றீ ரொன்றுகேட்ப
மூளருந் தவத்திராம தாசர்தம் முகத்தைநோக்கி. (உ௪௬)

யாங்கள்பண் டரிக்குச்செல்லும் யாத்திரைக் காரரொன்முர்
ஆங்கவ ரிராமயோகத் தமைந்தன ரிருக்கவந்தோர்
ஈங்கிவர் பெரியயோகி யெனத்தெளிந் தவர்பால்வந்து
பூங்கழல் வணங்கியைய போதுக வெம்மோடென்முர். (உ௪௭)

பண்டரி புரத்திலெந்தப் பரமனுள் ளான்மற் றன்னுன்
தொண்டரி லெவருக்கேது சூழ்ந்தன னென்முர்தாசர்
புண்டலீ கருக்குக்கண்ணன் போந்துநின் றவரோயாதி
கண்டபற் பலருக்கெல்லாங் கருணைகூர்ந் திலங்குகின்முன். (உ௪அ)

ஆதலர் னீவிரொம்மோ டடைந்தவன் றனைச்சேவிக்கப்
போதுக வென்றுவேண்டப் புனிதராம் ராமதாசர்
சீதைதன் கேள்வனேயென் குலதெய்வ மவனைத்தீர்ந்தோர்
காதனி னணுகுறுதென் மனமிதற் கென்னுன் செய்வேன். (உசக

என்றனர் வினவியாரு மிவர்கருத் திவ்வாறேவென்
றன்றவர் தமைவணங்கி விடைபெற்று ரகன்றார்பின்னும்
ஒன்றரி தாசர்நோக்கி யுடன்வரக் கூவத்தாசர்
நன்றவ ணிராமனுண்டே னணுகுவ னும்மோடென்றார். (உருo

ஜனகிதன் கேள்வனேயவ் விட்டலன் றனென் றுற்றோர்
சொனவுரைக் கிசைவுறாம விருப்பது கண்டுசூழ்ந்தோர்
மனநல முடையகற்பின் மாதர்போன் றவரொன் றெண்ணி
நனர்விடை பெற்றுச்சென்றார் நளினநா யகனதோர்ந்து (உருக

தானொரு மறையோனாகித் தாசர்வாழ் கானஞ்சார்ந்தான்
நானநன் கியற்றித்தாச ரடைசுட்டு நவிலிராமன்
போனகஞ் செயச்செய்துண்ணும் போதுவே தியனைக்கண்டு
தேனலர் போதுபோலுஞ் சேவடி களைச்சேவித்து (உருஉ

இப்பிர சாதந்தன்னை யினிதுநீ ருண்பீராகில்
ஒப்பிலாச் சனகிகேள்வர்க் குவப்பதா மென்றுவேண்ட
அப்பிரா மணன்கேட்டுக்கா னடைந்ததிங் கிதற்கேயென்று
மைப்பிர ளயத்தின்மூழ்கி நனைந்தவஸ் திரத்தினோடே (உருங

பன்னிரு நாமஞ்சாத்திப் பலாசிலை களைத்தைத்துக்கொண்
டன்னவர் தம்பால்வைக வடைதந்து மிசையுமென்றார்
சொன்னவர் முன்பேகண்ணன் சுரரமு திலுநன்றாமீ
தென்னவுண் டிராமதாசர் தம்மைப்பார்த் தியம்புகின்றான். (உருச

பட்டினி பன்னாளுற்றேன் பசிதெறப் படைத்தீ ரப்பம்.
முட்டிலை யெனத்தாசர்க்கு முகமனன் குரைத்திருக்கக்.
கிட்டிய நீர்யாண்டுச்செல் கின்றனிரிருப்ப தியாண்டு
மட்டினும் பெயரோதென்ன மறையவன் வழுத்துகின்றான். (உருரு

பண்டரி புரத்திற்பன்னாட் பயிலுவேன் குடும்பத்தோடும்
எண்டரு மெனக்குநாமம் விட்டல படவே யென்பார்
தொண்டரா யாத்திரைக்குத் தொகுமவர்க் கெதிரில்வந்து
கண்டவர் தமைக்கூய்ச் செல்வான் கடுகுவன் வருடந் தோறும். (உருசு

ஆடிமா தத்திலேகா தசிசமீ பித்ததாலே
நாடினன் வருவோர்கூவ நணுகின னனுகநீரும்
கூடியென் னுடனேவாரு மென்னக்கா குத்ததாசர்
தேடிலன் ராமன்றன்னை யன்றிவே றொருதெய்வத்தை (உரு

நானினிது வந்துகாண ராமனங் கிருந்துசேவை
தானினி துதவுவானேற் சார்குவெ னும்மோடென்றார்
தேனினி தொழுகுங் குல்லைத் தெரியலான் றன்பாலுள்ளான்
மானினி தூர்வோனீன்ற மகனுமக் கிராமன் றன்னை (உரு

காட்டுவான் வருதிரென்று கழறினன் மறையோனச்சொற்
கேட்டுள மகிழ்ந்தி ராமதாசர் தத்துடனேகிட்ட
வேட்டுடன் வரமார்க்கத்தில் விண்மிகப்பெய்துசேருய்த்
தாட்டுணை களின்முட்டைக் கத்தாசர்தாந் தளர்வுருமல். (உருஅ)

மறையவன் முட்களெல்லாந் தன்கையால் வாங்கிப்போக்கிக்
கறவையான் முன்னே செல்லக் கன்றுபின் றெடருமாபோல்
நிறைதவர் தொடர்ந்துசார நெடிதுபோய்ப் பண்டரிக்கு
முன்றமுறை வருவோரோடு கூட்டியுட் போதமூட்டி. (உருமு)

இன்னுமிங் கெய்துவோரை யழைத்தியான் வருவேனென்று
பன்னியக் மறையோனேகப் பாண்டுரங்கன்றன் கோயில்.
மின்னிய சிகரங்கண்டு மிகவுமா னந்தங்கொண்டு
பொன்னியன் மார்பிணைப் புகழ்ந்தனர் போகும்போது. (உசுக)

பல்லியமுழங்க நேர்ந்து பரவினராடிப்பாடி
எல்லையிலன்பர் கூட்டமான நீத்தவசமெய்திப்
புல்லுவர் தொழுவராகி யொருவர்க்கங் கொருவர்போற்றும்
நல்லியற் செய்கை யெல்லா நயந்தனர் வியந்துசொல்வார். (உசுஉ)

இன்னவா றவசமாக விலங்குமிக் கோயில்போல
முன்னர்யா னெங்குங் கண்டதின் றெனமுகங் குளிர்ந்து
பன்னகவைரிகம் பத்திடைவந் துபணிந்துபோற்றி
நன்னரங்கமரு மாஞ்சனே யரை நணுகிக்கண்டார். (உசுங)

கண்டடி தொழுது போற்றிக் காகுத்தற்கன் புசான்றீர்
எண்டகுமு மதிராமனெங்குள னியம்பு கென்றூர்
பண்டய துவாபராந்தத் திடை பசுந்துள வக்கண்ணன்
கொண்டல் போனிறத் திராமன்று னெனக்குறிக்கச் செய்தான், (உசுச)

அன்று தொட்டின்று காறும பேதமாய் வணங்கு கிற்பேன்
நன்று செய்கண்ணனே யிவ்விட்டலனுமங் கொண்டான்
தொன்றுறு ராமனே கண்ணன் பதந்தொழுதி யென்றூர்
மூன்றுறு மருத்தின் மைந்தர் முயங்கினரழைத்துச் சென்றூர். (உசுரு)

மாருதியுடனே சென்று வளரொளி விமானத்துள்ளே
நேருற விளங்குகின்ற விட்டல நிமலன்றன்னைச்
சீருறப்பணிந்து நின்று தினகரகுலத்திராமா
ஏருறு ஜனகிகேள் வாவெனப்பல புகழ்ந்து போற்றி. (உசுசு)

நின்ன திராமரூபம் யான்கண்டு நினைந்து போற்ற
நன்னரிங்கருள் செய்கென்ன நயந்தருள் பாண்டுரங்கன்
தன்னருட்டம்பியோடு ஜனகியுந்தானுமாக
முன்னர் நின்றிலங்கித்தாசர் தமையுற முயங்கல் செய்தான். (உசுஎ)

முன்பஞ்சவடியிற்கண்ட முறைகண்டு தொழுது போற்ற
அன்பரஞ்சலிக்குக் கண்ணனவ்வகையான தோர்ந்து
பின்பங்குச்சார்ந்த தொண்டர் தாசரைப் பெரிதுபேணி
இன்பஞ் செய்திராமன்றன்னைக் கண்ணனுயியற்று கென்றூர். (உசுஅ)

குறைவிலாவன்ப ரெல்லாங் கூடினர் வேண்டு கின்ற
முறை நிலாவுதியிராமா வெனத்துதி மொழிந்து போற்ற
நிறைகுலாந்தாசரேத்து நிலைப்படி நிலாவி நின்றான்
மறை யெலாந்துணிந்து போற்ற வயங்குறு பாண்டுரங்கன். (உசக)

கண்டுறு தொண்டர் யாருங்காலிடைப் பணிந்திராம
தொண்டரைப் பலவாறுகத் துதித்தவர் செங்கை தங்கைக்
கொண்டனரரிதன்னும கோஷஞ் செய்தவரோடந்தப்
பண்டரி நகரைச்சூழ்ந்து வலம் வரும்பரிசு பார்த்தோர். (உஎ0)

பரவசராகிக் கூத்துப்பயில்வதும் பரமனுமம்
திரமுறப் புகல்வதுங் கண்டுளந்தனிற் செறிந்தானந்தம்
விரவுறு ராமதாசர் விழிகணீர்ததும் பவிம்மிக்
கரதலந்தாளங் கொட்டப்பாடினர் களிந்து வந்தார். (உஎக)

கருடகம் பத்திற் சார்ந்து கண்ணற்காரதியுஞ் செய்து
தெருடரு தீர்த்தமான சந்திரபாகை சேர்ந்து.
புருடரிற் சிறந்தநாம தேவர்தாம் புளினத்தாடு.
மருள் கெடப்பாடு நாம கீர்த்தனவகைகள் கேட்டு. (உஎஉ)

இரவொரு மூன்று ஜாமத்தளவு மின்புற்றிருந்து
பரம னுள்ளுவப்பதாக வாரதி பரிவிற் செய்து
வரபிரசாத நல்க வாங்கினர் மறுதினத்தில்
தரமிகு தாசரெல்லாந் தாசரைப் பணிந்து போற்றி. (உஎங)

இன்றிராக் கதைநீர் செய்ய வேண்டுமென்றி ரந்துகூற
ஒன்றிய ராமதாச ருறுசிறு வயதிலேயான்
துன்றிய வனத்திற் சேர்ந்து ராமநாமங்கள் சொல்லி
நன்றினி திருந்தேன்றன்னை நாமகீர்த்தனஞ் செய்கென்றால். (உஎச)

தாளம் யாழிசை யிராகஞ் சார்வுறப் பாடநிற்க
ஆளலே னென்று ரன்பர் யாவருமவரை நோக்கி
நீளராமனுக் கன்புற்றீர் நீர்சொன்னபடியே கேட்டான்
நாளநன்க மலம்போலு நயனங்கொள் பாண்டுரங்கன். (உஎரு)

இப்படி மகிமை யேய்ந்த நீரினி தெவ்வாறுகச்
செப்பினு மெமக்கானந்தஞ் செறிவதாம் பகர்கென்றன்னர்
ஒப்புறப் பணிந்துபோற்ற வுவந்துடன் ராமதாசர்
மைப்புயல் போலுமேனி ராமனை மனத்திற் கொண்டு. (உஎசு)

விட்ட லன்றன்னை நோக்கி விதவிதமாகப் போற்றி
மட்டறு கதை செய்தியார்க்கு மாதவ னுமந்தானே
இட்ட தாரகமா மென்னவியம்பி நிச்சயிக்கக் கேட்டோர்
உட்டழை வாகிக்கண்ணற் காரதி வுவப்பச் செய்தார்.

வேறு.

மறுதினந் தண்மதி நிறைவாந்திதி
பெறுத லாலன்று பாண்டுரங்கப்பிரான்
செறிமணிச் சுடர்த்தேரி லெழச்செய்து
நெறிதரும் பல்லியங்க ணெருங்கவே.

பரவுகின்ற கோபால காலா வெனும்
தரம தாமுற்சவஞ் செயச் சார்ந்தனர்
விரவுகின்ற கோபால புரம் விராய்
அரவ நீடுறப் பாடின ராடினர். (௨௭௯)

கண்ண ளூடுறு கந்துகந்தும் பிகோல்
நண்ணு கோணங்கி கொம்மியெனு நவில்
வண்ண நல்விளை யாட்டின் வகைசெய்து
வெண்ணெய் நெற்பொரியோடு நிவேதித்தார். (௨௮௦)

நிம்பராஜ ரருள் பிரசாதநீ
டம்பரத்த ரடைந்து மனிதராய்
இம்பர் சிந்தின கண்டெடுத்துட் கொள
நம்பியாவரு நன்கினி துண்டனர். (௨௮௧)

உண்டபின்பு கண்ணன் னுடனேங்கு சீர்
மண்டு கீர்த்தனம் பாடியுறி யுறிக்
கண்ட நெய்தயிர்பாற் கலங்கோல் பொத்துக்
கொண்டருந்தி நின்றமைனர் கூடினர். (௨௮௨)

இன்னும் பல்விளை யாடலொ டெய்தினர்
மன்னும் பண்டரி வந்தருட் கண்ணனை
மின்னுங் கோயில் விளங்க விருத்தினர்
துன்னுந் தம்வயின் யாவருந் துன்னினர். (௨௮௩)

கோயி லர்ச்சகர் கொண்டக தவிரா
வாயின் மூடிமனை புகலானபின்
சாயிலன் புறுதாச ரதிக்கன்பு
மேயினர் நல்விடை பெறும்பொன்னா [illegible]. (௨௮௪)

கண்ணன் கோயிற் கதவுரு [illegible]
திண்ணை மேய்கதவந் [illegible]
நண்ணவுட் புருந் தாயி [illegible]
வண்ணமா மலர்ப்பாத [illegible]. (௨௮௫)

தீர்த்தன்முனிற் சிரய்ந்து [illegible]
எத்திசாத வெனைத் தினங்காணவு [illegible]
ஆய்த்துப் பின்றிய யருஞ்சவாறு [illegible]
பார்த்தி பன்னவன் பக்கல் புகும்படி. (௨௮௬)

எனக்கு நல்விடை யீகென வேண்டினர்
புனக் கொழுந்துள வோனருள் பொங்கிநீ
வனக்க ணிங்கியென்பால் வரலென் றென்றனன்
உனக்கென் பாலரு ளுற்றவன்று மென்றார். (௨௮௭)

பின்னையும் பெருமானை வணங்கினார்
என்னைநீ பிரியாமலி ருந்தருள்
துன்ன வேண்டு மென்றார் சொலத்தோ மிலான்
நின்னை யோர்கண நீங்கிலன் யானென்றான். (௨௮௮)

நாதனோத நலங்கிளர் தாமரைப்
பாதமன் பிற்பணிந்து விடைபெற்று
நீதமேய் தத்துடன் புரநீள் வலம்
ஆதல்செய்தரி நாமமயர்ந் திடார். (உஅக)

போதுவார் நரசிங்க புரத்திடைக்
காதலா னொடிறங்கிக் கடிநகர்த்
தீதுதீர் பிச்சைசெய்து வந்தட்டடை
ஓதிராமனை யுண்பித்துண் போதிலே. (உகம)

விட்டலன் னொருவேதிய னாகிவந்
தொட்டரும் பசியுற்றுளன் யானென
அட்டதுப் பிலுமக்க மைவாருமோ
இட்டம் யாதென்றியம் பினர்தாசரே. (உகக)

தவிடுகொண்டு சமைப்பதுண் பேன்றனக்
கிவிட நீருத வப்ப மினிதென
அவிடந் தந்ததருந் தியவ்வேதியன்
உவிடமார்திரு மாலகத் துற்றுநீர். (உகஉ)

இன்று செய்யுங் கதையென் றியம் பினன்
நன்றுநன்றென ராமனடியவர்
அன்றுகோயி லமர்ந்தரி கீர்த்தனம்
துன்றுவோர் மகிழும்படி சொல்லினார். (உகங

மங்களா ரதிசெய்து பின்மாலருள்
தங்கரும் பிரசாதமுந் தாம்பெறீஇ
அங்க ணீங்கி முன்னோர் தருமாவுலி
பொங்கு நீள்வனம் புக்கிருந் தாரரோ. (உகச)

அரசனான சிவாஜியறிந் தங்கே
விரசினன் மகிழ்மே வித்தன்றே சிகரப்
பரசராஜனைப் பார்த்து நான்புண்டரி
புரச நார்த்தனன் பாற்புக்கு மீண்டனன் (உகரு)

என்னைக் கண்டிலை பட்டினி யெய்தினை
முன்னைச் சோர்வுறச் சென்றுன் முதுநகர்
தன்னைப் போற்றிநன் குண்டிரு தாமரைப்
பொன்னைச் சேர்திரு மார்பற் புகழ்ந் தென்றூர். (உகசா)

சொன்ன தேசிகனைத் தொழுதார் செலீஇப்
பன்னருங் குரு பாதநினைவுடன்
அன்ன முண்டங் கமர்ந்தன னவ்வநாள்
உன்னருந் திவ்வி பாக்ஷா வென்றுள்ளவன் (உகஎ)

அளவில் சேனையடர் வுறத்தென்றிசை
உளநராதிபர் தம்மை யொடுக்கி நீள்
வளமெ லாங்கொடுவை குறுங்கோயிலிற்
கிளரும் விக்கிரகங் கட்டிகொடுத்தரோ. (உகஅ)

கோக்களைக் கொலைசெய்து தொழுங்குல
மாக்களைக் கடிந்தின் னலில்வாட்டியே
பூக்களைச் சொரிந்தே புனிதந்தரு
காக்களைச் செறிகண்ணனதி வந்தான். (௨௱௯௯)

வந்துதீரத்திறங்கினன் வைகுபோ
தந்தவேந்தன னீகத்தலை மகன்
உந்துமாவுலிக் கானிடை யோர்குறி
தந்து மற்றதிற் சாயகம் வீசினான். (௩௱)

வீசினான் பயில்கின்றதை மெய்யுணர்
தேசிகோத்தமர் கண்டவன் முன்சென்று
நீசிலீமுக நேருற வெய்தலிங்
கேசிறந்த தென்றெண்ணலை யேவினை. (௩௱௧)

விடுத்துப் பாய்ந்துபின் பற்றன் மிகப்பெரி
தடுத்தவீர வென்றாரது கேட்டவன்
தொடுத்தவம் பைத்தொடர்ந்து பின்பற்றுறக்
கடுத்தல் யார்க்கு மொண்ணாது நீர்காணவே. (௩௱௨)

எய்கின்றேனம் பினைப்பற்று மென்றனன்
செய்கென்றா ருடனெய்த சிலீமுகம்
கைகொண்டார் பின்றொடர்ந்து கடுப்பினின்
மெய்கண்டான் வியந்தானடி வீழ்ந்தனன். (௩௱௩)

பூவிலே யவதார புருடரோ.
ஆவிர் நீரிந்து விற்பகீ ராமென்றான்
தாவிலன் பரவன் கைத்தனுக்கொடு
வீவிலோர்கணை நேர்விட பிக்கணே. (௩௱௪)

ஏவிமுற்றுந்து வார மியற்றினார்
மேவிநின்றவன் கண்டு வியப்பெய்தி
தாவினம் முடைத்தானையும் வேந்தனும்
தேவினேரிவரோரம் பிற்றீயுமே. (௩௱௫)

எனநடுங்கினனேத்தினன் பன்முறை
தனது தானையுட் சார்ந்து தராபதிக்
குனகர் செய்கையறிவித்து வேந்தனோ
டுன்லரும் பதிக்கெய்தினனுத்தமர். (௩௱௬)

அங்கு நீங்கினர் சாம்பளகடேமப
பொங்கு மூரிற் புகுந்தன்றி ராத்திரி
தங்கிராம கதைசெயச் சார்ந்துகேட்
டெங்கு மில்லதோ ரற்புதமீதென. (௩௱௭)

அவசராயினர் யாவரு நேரிலாத்
தவரிடத்துப் தேசந்தனைப்பெற
இவறினார்சிலர் சேவைக்கிசைந்துடன்
பவரினார்சிலர் பற்றலுற் றார்க்கெலாம். (௩௱௮)

சார்ந்திருந்தீத்ஞ் சீடரை தாமரைத்
தார்ந்தபுன்மரத் தாரிலை யாவுநீர்
சேர்ந்துதீர்ந்து புனல்கெடச் செய்தன
ஓர்ந்துநீரிதொ ழிமினெனச் சொனூர் (௯௮௯)

கேட்டசீடர் கிணற்றின் மிசைக்கிளை
நீட்டமாகி நிமிர்ந்துள தன்னதை
நாட்டடிக்கண் ருக்கின்ம ரத்தடி
மாட்டமர்ந்த குருதலை மன்னுறும். (௯௯௰)

நுனிகழிக்கி னுடங்குங்கி ளையுடன்
இனியநீர்த்தர வில்விழு வோமெனூத்
தனிதனிக்கருத் திற்கொடு தாழ்ந்தனர்
கனியிருப்புழி நண்ணின ரூர்சென்றோர். (௯௯௧)

தருவடிக்க ணிருந்துதந் தேசிகர்
அருளுமேவலை யாற்றகில் லார்களாய்
மருவிநின்றவர் வந்தவர் தங்களில்
வெருவிலாதவம் பாஜிவி ளம்புவான். (௯௯௨)

ஏவுமேவ லியற்றப்பன் ஞழிகை
மேவமாதலின் மெய்யுணர் வீர்புனல்
நீவிராட வெழுமென நின்மலர்
தாவுமிக்கிளை தன்னைத்து ணித்தபின். (௯௯௩)

ஆடுவேன்புன லன்றிமற் ருடலேன்
கோடுதன்னைக் குறைக்கெனக் கூறினூர்
நீடுகூர்நவி யங்கொடு நீண்மரத்
தோடுறுங்கிளை யுற்றவம் பாஜியும். (௯௯௪)

சாமிநீர்தருத் தன்னடி விட்டயல்
போமின் வெட்டுங் கிளைபொருந் தாதென
யாமிங்கன்றி யயற்செல்கி லோங்கிளை
வாமிடத்துற்று மாற்றுதி யென்றனர். (௯௯௫)

என்றதேசிக ரோவலி யற்றுவான்
சென்றுநீள்கிளை சேர்ந்தடி யைய்த்தெறத்
துன்றுமக்கிளை யோடுது ரவிடை
ஒன்றுநீரு ளழுந்தலுற் றனரோ. (௯௯௬)

விழ்தல்கண்டு வெருவியா ஊாவெனச்
சூழ்தலாகிய சீடர்து ளங்கினூர்
ஆழ்தரும்புன லாடிய தேசிகர்
தாழ்தரும்புடை தாம்வந்து சார்ந்தனர். (௯௯௭)

அக்காபாயி யழுதிடு கென்றனர்
மிக்கார்கூவ விரைந்துவந் தையரோ
யுக்காறாழ்கிணற் றென்றுநும் புந்தியுள்
இக்கா லத்தோன்று மெண்ணலி ரொன்னெனூ. (௯௯௮)

இன்னுளந்துயர் கொண்டதிங் கென்றனள்
சொன்ன தோர்ந்து துளக்கமி றேசிகர்
அன்னவன்றனைத் தொட்டுனக் காவதென்
பொன்னனையுனக் கேன்றுயர் போக்கென்றார். (௯௩௯)

என்னலுமொன்றி யம்பலள் போனகம்
நன்னர் நல்கவெல் லாமொடு நன்குண்ட
பின்னர்வந்து சிவாஜிபெ ருந்தகை
மன்னுதேசிகர் பாதம்வ ணங்கினான். (௯௪௰)

வணங்கினானைக்கா பாயிவதனத்தை
இணங்கிநோக்க முகமிறங் குற்றதை
நிணங்கொள் வேலவன் கண்டுநி கழ்ந்ததென்
குணங்கொள் பைந்தொடி கூறுகென் றனனோ. (௯௪௧)

நங்கைமுன்னர் நடந்தவெ லாஞ்சொலச்
சங்கைகொண் டரசன் சற்குரு வின்பால்
அங்கைகூப்பிவி னவவச்சங்கொடு
பொங்கைமாநகர் போயினன் போற்றியே (௯௪௨)

ஈதுதேர்ந்தய லூரின ரெய்தியித்
தீதுசெய்த வரைத்திறல் வேந்தனே
யாதுஞ்செய்கில னய்த்தன்பதிபுகும்
போதுநாஞ்செய்வ தேதென்று பொங்கினார். (௯௪௩)

துரவின் மூழ்கினர் சோதிக்கக்கண்டிலர்
பரவம்பாஜியைப் பாரிடந்தின்றதோ
விரவு பொந்து விழுங்கிய தோசல
சரநுகர்ந்தன வோவென்று தாஞ்சென்றார். (௯௪௪)

தாசர்பின் புதந்தாசரோ டேகினார்
மூசவேறொரு மொய்பொழி லாறுநாள்
வாசமங்குவ திந்துபின் வந்தனர்
நேசனெய்துந் துரவிடை நேரவே. (௯௪௫)

ஐயம்பெற்றுவந் தோரட்டுப் போனகம்
செய்ய நீளிலை சேர்த்தன ரவ்வயின்
மையல் யானைச் சிவாஜியும் வந்தனன்
மெய்யர் பாதம் விரும்பித் தொழுதனன். (௯௪௬)

கண்டு நீயு முண்காட்டெங்கள் மாட்டென்று
விண்டுதாசர் விளம்பவவ் வேந்தனும்
மண்டு யந்தியில் வைகினன் பேரருள்
கொண்டு கூயினர் கூவத்தம் பாஜியை (௯௪௭)

ஏனென்றான வனைக்கல்யாண நீ
தானிவ்வைந்தனை யோவெனத் தம்மரு
ளானமைந்துள னன்னபடி யென்றான்
வாநயந் தெம்வயி னெழுந்தென்றனர். (௯௪௮)

கிணறு நீங்கிக் கிளர்குரு சாமிதன்
புணரும் பொன்னடி புக்குவணங்கினான்
அணவி யாருமதி சயித்தேத்தினார்
உணவு கூர்மகிழ் வோடினி துண்டனர். (௯௪௯)

வேணவாவினை மெய்க்குரு நீகலி
யாணமா வென்றறைந்த மொழிப்படி
ஏணதேய் கலியாண கோசாமியென்
றுணமோ டழைத்தார்க ளெல்லாருமே. (௯௫௰)

வேறு.

அன்னபோ தாண்டுச் சிவாஜி ராஜனும்
தன்னருட் குருவினை நாடிச் சார்ந்தனன்
பன்னிய பழம்படி பரிந்து பூசித்து
மன்ன மாங்கனி நிவேதனம் வகுத்தனன். (௯௫௧)

அக்கனி கனையினி தியார்க்கு நல்கிப்பின்
றக்க தென்றருந் தினர்தாமுந் தாசராய்த்
தொக்குளோர் முகங்களை நோக்கிச் சோர்விலா
திக்கடை யரசியானி யற்றவெண்ணினேன். (௯௫௨)

ஆதலா லிருந்தர சியற்ற வாதனம்
மேதக வியற்றுமி னெனவி னவினார்
மாதக வுறவவண் மண்ணிற் செய்துதந்
நாதனை யதன்மிசை நலத்திருத்தினார். (௯௫௩)

அட்ட மந்திரிகளு மமைந்து சூழ்தரத்
தட்டறச் சதுரங்க தளமுந்தம் முளே
ஒட்டற நியமித்தங் கொல்க நீள்கொடி
கட்டினர் மாருதி கவினத்தீட்டியே. (௯௫௪

அரசனு லாங்கலங் காரம் யாவையும்
விரசுற நிகழ்வித்து விமலர் முன்னதாய்ப்
பரசக் காபாயியைப் பரிந்து கீர்த்தனம்
உரைசெயவு ஞற்றிப்பின் வேணுபாயியும். (௯௫௫)

கதைசெயப் புரிந்துபின் கலந்தெல்லோர்களும்
இதையமொத்தரி திருநாம மேத்தினார்
அதையுணர் வுற்ற சிவாஜி ராஜன்மற்
றெதையு மோர்கிலன் பரவசம தெய்தினான். (௯௫௬)

இருதின நினைவிலா திருத்த லோர்ந்துதா
சருமிவ னினைவின்றித் தங்குவா னெனில்
மருவரா செங்கனம் வழங்கு விப்பதென்
றருளுட னுள்ளத்தி லமைய வெண்ணினார். (௯௫௭)

தாவருதாச போதக் கிரந்தமொன்
றுவலிற் செயும் படிக்காரம் பித்ததை
மேவுகல் யாண கோசாமி வேண்டியங்
கோவற வெழுதவன்று தயங்தொட்டரோ. (௯௫௮)

மறுதின முதய மாவதற்கு முன்னரஃ
திறுதிய தாயதி லேந்தனி திதான்
உறுவதேழ்த சகமு முதவி மன்னவன்
நிறுவுற வுள்ளத்தி னியமித்தாரரோ. (ருறுக)

அரசன் பாராயணஞ் செய்ய லானபின்
புரைதபத்தெளிவு கூர்புந்தி பெற்றனன்
வரமரு டாசர்பின் மாறன் கீர்த்தனம்
திரமிகச் செய்து கொண்டரசுஞ் செய்தனர். (ருகூ0)

அரச னுயருள் விளையாட லாடினார்
கரையறு வேதியர்களுக்குப் போஜனம்
தரமுடன் சமைத்துப் பன்னிரண்டு வற்சரம்
விரசுற லாகவோர்தினத்தில் வேந்தனை. (ருகூக)

பார்த்து னூர்க்கே கெனப்பணித்தி ராறென
வாய்த்துள வருடங்கட மில்வ குத்துள
சீர்த்தியின் மிகுந்ருகீதை செவ்வையின்
நீர்த்தபஞ்சீகரணமு நிரம்பவே. (ருகூஉ)

அமைம நாசுலோகம் ராமாயணம் பெறக்
கமைபெறுகாவலற் கருளிவேறொரு
வெமைதரு கானகமே வக்காவலன்
செமையுறு நகரிடைச் சென்றிருந்தனன். (ருகூரு)

ஆரியர் தருமவையனைத்து நாடொறும்
சீரியதென்று பாராயணஞ்செய்து
நாரினிதுறவரு நாளின் மன்னவன்
சாரியல் புராணம் வாசிக்கச் சார்பவன். (ருகூச)

வடமொழி வல்ல காகாவென் பண்டிதன்
அடலரசன் செய் பாராயணத்திலே
திடமிக நெடுவிரோதஞ் செய்தீமையன்
மடனறு தாசரைப் பழித்து வாய்ந்துளான். (ருகூரு)

அவன வாறுயுறலான நாளிலே
புவனியாளரசனிற் போந்திராமதா
சுவமையில் கீர்த்தன முரைத்து நிற்புழி
நவமிகப் பண்டிதன் கேட்டு நாடியே. (ருகூசு)

பரமவானந்தமே பரவப் பார்த்தலும்
வரமிகு தாசர் மாருதியின் வாய்ந்தனர்
அரசவைதனிலதி சயித்துப் பண்டிதன்
கரமுறக்கு வித்தவர் காலில் வீழ்ந்தனன். (ருகூஎ)

விழுந்தவனெழுந்து சற்குருவை மெய்ம்மையாய்
மொழிந்தனன் பலதுதி மொழியத்தாசரும்
அழுந்துறப் புல்லியாரதி செய்தார் மலர்ச்
செழுந்திரு நாதனுக்கன்பு சேரவே. (ருகூஅ)

தேவினுக்கமை பிரசாதஞ் சேர்ந்தவர்
யாவரும் பெறவினி தருளி வேந்தனுக்
கோவுறு மாசிகளுரைத்துப் பின்பொரு
மாவியல் கானகமருவினரரோ. (௬௬௯)

வேறு

பின்பிராமதாசரன்பு பெற்ற சீடர் யாரொடும்
அன்பின்ராம நாம நன்கறைந்து கொண்டு சாம்பள்க
டென்புரங்கலந்தோர் சாரிருக்கும் வெற்பிலேறினர்
இன்பொடங்க காரமொன்றி யற்றினரிருக்கவே. (௬௭0)

மலையின் மீதிலந்த மாமடஞ்சிறந்து வைகிய
துலைவிலாமலின்னு மங்கணுற்றி ராமதாசர் பின்
குலைவிலாச ஹாபுரொன்னு மூர்கலந்து குறைவிலூர்
நிலையதாக நீடு மாஞ்சனே யரைப்பராவினர். (௬௭௧)

பகலில் ராமபஜனை செய்து பாடுதாச போதமென்
றிகலினீள் கிரந்தம் யாரு மின்பமுற்று வினவுமா
தகவினர் கல்யாணசாமி தான் படிக்க நாடொறும்
புகல்வதான கவியினன்பு பொங்கியங்கோர் வேதியன். (௬௭௨)

தாசர் முன்புகை குவித்து நின்று சாமிதாசனேன்
பாசநீள் குடும்பவாழ்வு பற்ற நாளுநைந்துளேன்
நேசமின்றி நீக்கினலு நீங்குமு மனீடுகி
லேசம் யானகன்று நன்மை யெய்த நீர் செய்கென்றனன். (௬௭௩)

என்று தாளுமவனை நோக்கி யெதிர் சொலாதிராமதா
சன்று நீடு சீடரோடு மங்கோர் வாவியின் புறம்
சென்று தங்கியுடனடைந்தவவன் முகந்திரும்பி நன்
கொன்று நீள் விராகமோடு குருவுரைக் குளாயினல். (௬௭௪)

உறுகுடும்பவிடர் கடத்தியெனவுரைக் கவுற்றவன்
மறுவினீர் சொல்கின்ற தெந்தவழியதேனு மருவுவேன்
சிறுமையே யெனச்சொலத் தெரிந்துதேசி கோத்தமர்
குறுகியிம் மரத்திலேறி வாவிமேவு கொம்பிலே. (௬௭௫)

வருதியென்ன வவனவாறு மரமிவர்ந்து வந்தனன்
வெருவலோடு சொன்னகொம்பின் மீதுகண்டு மெய்க்குரு
இருபதங்க ளலைநீள விடுதியென்று கூறினர்
மருவவன்கை கோடுகொண்டு கால்களுல வாவிமேல். (௬௭௬)

தூங்கராம தாசர்கண்டு கோடுனைத் தொடர்ந்ததோ
ஓங்குகோடு நீதொடர்ந்து ளாய்கொலென்ன வுற்றவன்
தாங்குகோடு தன்னையே.தொடர்ந்துசார்ந்து ளேனெனை
நீங்குகின்றி லாய்குடும்ப நீபிடித்திவ் வாறரோ. (௬௭௭)

இடர்கெடுக்க வேண்டுவா யெனிற்கரங்கள் கொம்பினைத்
தொடர்தல்விட்டு விடுதியென்று தோமிலா ருரைத்தனர்
படர்விடுத்து நன்மையெய்த வந்தபாவி யிந்தநீர்
அடர்தலத்தில் வீழவோ வடுத்ததென் றழுங்கினன். (௬௭௮)

அவனழுங்கல் கண்டுதாச ராழ்கடற்கு ளமிழ்வுறு
மிவனுயர்ந்த மலையெலா மிதப்பமுன்பி யற்றினேன்
கவலைகொண்ட நின்னைநன்கு காப்பனஞ் சிடேலெனத்
தவர்விளம்ப னம்பியங்கை தாவுகொம்மை விட்டனன். (௩௭௯)

விட்டவன் குளத்தில்வீழ்ந்து மீள்கிலா தழுந்தினன்
உட்டனாது கண்டிறந்து நோக்கவங்கொ ரூர்விராய்
வட்டமாய்வி ளங்கமற்றொர் மடமுநோக்கி மற்றதில்
இட்டமான தாசபோத மினிதியம்ப நோக்கினன். (௩௮௰)

வினவவந்த ளோரையும் விராவுசீடர் பலரையும்
கனகதாரு வோடுகாம தேனுவுங்க லந்துபூ
வனமுமூசு துளவுமாவ ருக்கைவாழை யாதியா
யினவிராவு கனியும்வேண்டு வனவுமிக்க வியல்பையும். (௩௮௧)

கண்டுவந்து கனகமா மடத்தினிற் கவின்கொள்சீர்
மண்டுமா மணிப்பொனாச னத்தின்மீது வைகிய
தண்டுழாய்நி றத்திராம தாசர்தம்மை யுந்தெரிந்
தண்டுவோன் வணங்கினா னமைந்தசெம்பொ னடிகளே. (௩௮௨)

ராமதாச சாமிநீ யெனக்கு நன்மை நல்கெனக்
காமர்சே வடிக்குமுன்பு நின்றுகை குவித்தனன்
ஆமவேலை தாசருக் கருட்பிறந் தனுக்கிரகம்
தோமதேக நல்கினார் சுகக்கடற்குள் மூழ்கினன். (௮௩௩)

அன்னவேலை வாவியங் கரைக்கணே யமர்ந்தவர்
மன்னுவேதி யாகனாக்கண் வருதிநீ விரைந்தெனச்
சொன்னவோதை கேட்டுவேதி யன்மகிழ்ந்து துரிதமாய்த்
துன்னுநீ ரகன்றுவந்து தாசர்தாள்க டொழுதனன். (௩௮௪)

தொழுதுநின்ற ளோனைநோக்கி யின்னவாவி தோய்ந்தநீ
பழுதிலாம லங்கடைந்து பார்த்ததென்னை பகரென
முழுகினே னவண்டெரிந்த முறையெலோரு மறியவே
வழுவிலாது கூறியாவர் மொழிவருந்த மகிமையே. (௩௮௫)

என்றபோதி லங்கிருந்த யாவருந்தெ ரிந்துநீர்
ஒன்றவோதி னோரைநன்கு வந்துபோற்றி னார்பினர்
அன்றவண் டுறந்துதாசர் சாம்பள்கட டுத்தமா
குன்றமேறி யமரநேடு கொற்றவன்றெ ரிந்தனன் (௩௮௬)

குதிரையேறி வந்தமர்ந்த குன்றடிக்கண் வாசிமேல்
வதிதல்விட் டிறங்கியந்த மலையின்மீ திவர்ந்துபோய்
முதிர்தவத்தி னோரிருக்க முன்புகண்டு தொழுதுநின்
றதிகதாக மென்றுகையி னறியுமா றுணர்த்தினன். (௩௮௭)

அறிவதான நங்கையிங் ககப்படாது நீரிவண்
பிறிவதாயி னார்விராவு சீடர்பிச்சை பெறுவதற்
கெறிகைவேலி னையெனுமுன் யாரும்வந்து கூடினார்
செறியநீ ரிராஜனுக்கு வேண்டுமென்று செப்பினன். (௩௮௮)

புனலகப்ப டாதுவெற்பி லென்றனோர் புகன்றசொல்
வினவிராம தாசரிந்த வெற்பிறங்கி நீர்கொணர்ந்
தனர்கொடுக்கு மளவுமுற்ற தாகமோபொ றுக்கலான்
மனனெனக் கொடங்கொர்குச்சி கொண்டுமண்ணி லூன்றினர். (௩௪௯)

ஊன்றிடத்து நின்றுநீ ருடன்கிளர்ந்து பெருகின
தோன்றிவார் புனற்பெருக்கு கண்டுதொண்டர் யாரொடும்
ஆன்றமன்ன னுங்குடித் தருஞ்சுவைத் ததண்புனல்
ஏன்றதென்று கருதல்செய்த தாசர்தம்மை யேத்தினர். (௩௫0)

புனிததீர்த்த மாயதந்த நீர்ப்பெருக்கு புவனிமேல்
இனியதாகி வாருகின்ற தின்றுமந்த வின்புனல்
தனிலெலோரு மூழ்கிநன்கு சமையல் செய்து சாப்பிடத்
துனியமன்ன னூர்புகற்கு விடைசுரந்த னுப்பினர். (௩௫௧)

மன்னவன் வணங்கியேக மற்றிராம தாசர்தாம்
அன்னவெற்பி னிற்சிறு ளமர்ந்துபின்னொ ரரணியம்
துன்னலான காலமாரி சொரிவுதான காலமாய்
நன்னரோய்வி லாதுபெய்ய நனிநனைந்தி யாவரும். (௩௫௨)

குளிரினல் வருந்துபோது குணநலங் கொணங்கைதன்
ஒளிர்முகத்தை நோக்கியென் பசிக்குவேண்டு முணவெனத்
தெளிவிரோ ருனைக்கவீர விறகுகொண்டு செறிமழைத்
துளிவிழாது துகில்பரப்பி முளரிசுல்லி மூட்டியே. (௩௫௩)

பாயசஞ் செய்தெழுக வென்று பசிமிகுந்த தாசரைக்
கூயபோதி லவரெனக்கில் கொஞ்சமேனும் வெம்பசி
ஆயதென்ற வண்டுறந்து மறுதினத் தொர ரணியம்
போயமர்க்தெனக்கு மிக்கபசிபுணர்ந்த தென்றனர். (௩௫௪)

பூரிசெய்தியென்று சொன்னபடிவிரைந்து பூவையும்
மாரிதன்னின் முன்பு போல்வருந்திநன் கமைத்தபின்
சீரியோரை மிசைமினென்று செப்பு போதிலென்பசி
காரிருய காலதாமதத்தினிற் கழிந்ததே. (௩௫௫)

என்றுமற்ற நங்கைதம் மொடெய்துரூது மனம்வெறுத்
தொன்று தன்மனைக் கணேகுமாறுளுற்றவு வள்விடா
தன்று தொட்டுமிக்க வன்புகொண்டு சேவையதுசெயா
நின்றுதானு மன்னபான நீக்கி நிற்றலாயினள். (௩௫௬)

பூமிடைந்த மற்றொர்காடு புக்குநேர் கல்யாணகோ
சாமிதன்னை நோக்கியிங்கொர தனுவெனக் கியற்றிநீ
தாமிடக்க தாகவென்று தாசர்கூற நன்றெனுத்
தேர்மிலானும்வேயினேய்து ரோணமொன்றுநல்கினன். (௩௫௭)

கொடுமரங் கரங்கொடெங்கு முலவியாடல் கொண்டுற
அடுமடங்கல் போலும்வேந்த னஞ்சிவாழி யருகிலே
நெடுமடங்கொ ளதிபர்வந்து நீடுகாலம் யாமெலாம்
வடுமிலர் தனுக்ரகித்து வருவதாக வழுவினாய். (௩௫௮)

பெருவனத் துலாவுகின்ற பேயனுன வன்றனைக்
குருவெனக் கொடவனெ டுற்றகொடு வனத்தி னுலைகிருய்
கருதுமெம்மை யவமதித்து நீயிவாறு காடெலாம்
மருவநீதெ ளுவனுனை மதிமயக் குறுத்தினுர். (௬௯௯)

கேட்டவேந்த னென்றுநோர் கிளத்துரு திருந்தனன்
மாட்டடர்ந்த மடநலோர்தம் வயின்விராவு சீடனைக்
காட்டடைந்தி ராமதாச னியலறிந்து கடுகுமின்
நீட்டமின்றி யெனவனேரு நேடுவானெருங்கினுர் (௭௱)

வரலறிந்து தாசரங்கு மருவுபக்ஷி களையெலாம்
உரவிலா லடர்ந்துகொன்றி ராசிராசியாயுற
விரவல்செய்து கொண்டிருக்கும் வேளைவந்து கண்டுதம்
குரவர்பா லடைந்துளுற்று கொடுமைகூறி னுரரோ. (௭௱௧)

அதுதெரிந்து புரவலன்ற னருகில்வந்து வருகிநீ
சதுரனென்று பரவுகின்ற குருவின்மாடு தானெனு
முதுவர்கொண்டு பொழிலடைந்து முனைவிளங்கு தாசர்பால்
கதுவராம தாசர்சீடர் களைவிரைந்து நோக்கியே. (௭௱௨)

உண்டைவில்லி னுருவிகங்கம் யாவுநீவி னொருமரத்
தண்டைசேர விடுமினென்ன வவருமேவி யதுசெயக்
கண்டையா நினுதுதேசி கன்விகங்க வேட்டைபோல்
பண்டையா ரியற்றினு ரெனப்பகர்ந்து பதறியே. (௭௱௩)

அரசனேடி ராமதாச ரருகடைந்து மடநலோர்
விரசுகின்ற கானிலார் விகங்கவர்க்க முயிரெலாம்
பரசகின்ற நீபடுப்ப தென்பரர்க்கு நன்மைசொற்
றிரசமாக நின்விராக மினிதுமிக்க வினியதே. (௭௱௪)

எனவிகழ்ந்த போதிராம தாசரந்த யதிகளைச்
சினமிலாது நோக்கிநன்மை தீமையான செயலெலாம்
அனகனுன ராமனு லடுப்பதென் றறைந்தனர்
வினவிமா மடங்கண்மேவு மவர்விளம்பு கின்றனர். (௭௱௫)

விற்கையொன்ற நீவிகங்க வர்க்கம்யா வையுந்தடிந்
தொற்கமின்றி ராமனீது ளுற்றுகின்ற தென்றனை
நிற்குநன்றி தன்றெனு நிகழ்த்தராம தாசரச்
சொற்கிணங்க விப்பவங்கள் சூழ்கிலா தியற்றினேன். (௭௱௬)

ஆதலா லறிந்தநீயி ரருள்செய்திந்த வுயிரெலாம்
சாதனீங்கு மாறுளுற்றி லெனதுபாப முந்தபும்
நீதரோ யியற்றுகென்ன வவர்முனிந்து நீதியில்
பாதகாநீ சொல்வதென்னை பரமரானு மியலுமோ. (௭௱௭)

வளிதஞ்செய் தெமையியம்பு மிதுதகாத தென்றலும்
காளியன்றன் மீதிலாடு கண்ணனன்பர் கடுகியே
மீளிமொய்ம்பி னரசைநோக்கி விறகுதேடி வாவெனக்
கோளின்மன்ன னதுசெயக் கொளுத்தியக் கினிக்கணே. (௭௱௮)

பக்கியைப் படுக்கவின் பறந்துபோன தொன்றுபோல்
அக்கினிக்கணிமேலானவலை யெலாம கன்று விண்
புக்கிடக் தெளிந்து நின்ற புரவலன்றன் முன்புசார்
தொக்கினத்தர் நாணியஞ்சி முடிகவிழ்ந்து சொல்லுவார். (சாகூ)

உயர்த வத்துளீரியற்றுமு மது மெய்ம்மை தேர்கிலோம்
அயர் வடுப்பொறுத்தல் வேண்டு மெனவணங்கி யருள் பெறீஇ
இயலிடத்து மேவினார் பின் விடை கொடேந்தலேகினான்
முயல் வனத்து மேவு சீடர் பலருமின் பின் மூழ்கினார். (சாமி)

வேறு

புண்ணியதல மென்றேத்தப் பொருந்து கோலாபூர் வாழ்வு
நண்ணு வேதியனொருத்தன் ராமதாசிடத்தில் வந்து
பண்ணி வந்தன நின்றேத்திப் பரமசற்குருவே யான்வாழ்
வண்ணியவூரிற் சத்தியுபாசனை மலிவதாகி. (சுகக)

யாவராயினும் மங்கெய்தி ராமநாமஞ் சொல்வாரேல்
ஆவிபோங்காலத்தோது மதனை யேனுரைப்ப தென்று
நாவினாற்சொல வொட்டாமனவி வரிங்கிதனுக்கேது
நீவிர் செய்கின்ற தென்று நிகழ்த்திடக் கேட்டுத்தாசர். (சுகஉ)

நகைபுரிந்தவ்வூர் நண்ணி ராமநாமத்தை யாரும்
வகை வகையாகக் கேட்க வழுத்திக் கீர்த்தனங்கள் பாடித்
தகைபெறு மன்பு சான்று தனித்தனிய வசராகித்
தொகை தொகையாக ராமநாமமே சொலுமாசெய்து. (சுகந)

அங்கு நின்றியல் கர்ஹாடென்றறையு மத்தேசஞ்சென்று
தங்கி நாடோறும் ராமநாம கீர்த்தனங்கள் சாற்றப்
பொங்கிய வூராரெல்லாம் போந்துள மகிழ்ந்து கேட்டு
மங்கலம் பொலியச் சில்லோர் மனம்பரி சுத்தராகி. (சுகச)

சரணடைந்தேத்த வன்னார் தமக்குபதேசஞ்செய்து
வரலுறு நாளிலவ்வூர் மருவிய பாண்டியாத்தான்
தரவரு புதல்வி மிக்கவிளமைசால் கயினி தன்பேர்
விரகறி வேணுபாயி மேவிக் கீர்த்தனங்கள் கேட்டு. (சுகரு)

தாவிலன் புளத்திற்கொண்டு தாசரை வணங்கிப் போற்றி
மேவியகரண மூன்று மிகப்பரி சுத்தையாகி
மாவிரதியரே யென்பால் வளரருள் சுரந்திப்போது
நீவிரேயனுக்ரகிக்கவேண்டு மென்றிரந்து நின்றாள். (சுகசு)

அவளது சத்பாவத்தை யறிந்து நீமறை வல்லோர்க்குத்
தவலரும் போஜனஞ் செய்கென மகிழ் தாசர்கூற
உவமையில்லவளுந் தாசரோதிய படிக்கமைத்து
நவரசம் பொலியராம நாமஞ்சொல் வோரைக்கூவி. (சுகஎ)

கொண்டு போயு பரிகைக்கட் கோதிலாதனத்திருத்தி
மண்டுசோட சோபசார வகையெலாம் புரியத்தாசர்
அண்டுறு மவளுக்கின் பாயனுக்கிரகித்தா ராங்கே
உண்டுறவாத சேயை யுன்னினருளத்தின் மன்னோ. (சுகஅ)

அஞ்சனைச் சிறுவருன்னு மளவையிற் சகுணரூபம்
எஞ்சலில்லாது தோன்ற வெதிர்ந்தனரிருக்க நேரே
வஞ்சி நேரிடையாளன்னங்கறி பரிமாற வந்து
செஞ்சுடரவன் மாணுக்கர் தேசுகண்டயர்ந்து வீழ்ந்தாள். (சஉக)

வீழ்தலுந் தாசர் தாங்கி வெருவினள் கரங்கைக் கொண்டு
மாழ்கினண் முகத்தை நோக்கி வஞ்சி நீ யெதனைக்கண்டு
சூழ்தரலாயைச் சஞ்சொல் கென வேணுபாயி
வாழ்வருள் குருவே தேஜோமயத் தொருபுருடர் தம்மை. (சஉ௨).

வாலுடன் சுவணமாக வயங்கு கோவணமும் பூணு
நூலு நன்கொளிரக்கண்டு நோக்கங் கூசுதலாயஞ்சி
மேலு பரிகையில் வீழ்ந்தே னெனவிளம்புதலுந் தாசர்
கோலு மென் சீடர் தம்மிலொருவருங் கோடை சேயை. (சஉ௩)

கண்டிலர் நீ கண்ணுரைக் கண்டனை யிதனுனீதான்
கொண்ட பாக்கியமே பாக்கியம் பெரிதென்று கூறி
மண்டுறக் கொண்டு வந்த வகையெலாம் வாயுமைந்தர்
உண்டிடப் பரிமாறென்றங் குவள்பரி மாறச்செய்து. (சஉ௪.)

மாருதியருள் செய்துண்டு மறைந்த பின் மிகுந்ததுண்டு
நேருணு மிசைந்துமோடு நிறைந்த வேதியருக் கெல்லாம்
தாருடன் சாந்துந்தாம்பூல முந்தக்கணையு நன்கீயக்
கூரு நல்லருள் சுரந்து பின்பு முந்நாட்குலாவி. (சஉ௫)

ஹரிதிரு நாமகீர்த்தனங்கள் செய்தருளைப் பெற்ற
தெரிவை மற்றறிவுருமற் செறிவுறும் பழுவஞ் சேர்ந்தார்
பரிவுறுஞ் சீடரோடு படர்வழி வேணுபாயி
பிரிவினுக் கிரங்கித் தாசர்பாற் செல்வோர்பின்பு சென்ருள் (சஉ௬)

தேசிகர் தமைக்கண்டன்னுர் திருவடி வணங்கி யைய
தாசியாய் நும்பாற்ருனே சார்ந்தினி திருப்பே னென்ன
மாசிலார் நோக்கி நீயோ வனிதையிற் சிறுமி யாதல்
எசில்யா னுலவுங் கானமெங்கணும் வரலாகாது. (சஉ௭)

உன்னிடத் தருளால் யான்சொல்லுவதை நீயுறுதியாக
நின்னுளந் தனிற்கொண்டேகி நிகேதனத் திருந்துநாளும்
பின்னு கோதண்டபாணி விரைமலரடியைச் சிந்தித்
தன்னவ ளுமமோதிய மர்தியென்றனுப்பச் சென்ருள். (சஉ௮)

தாசர் தம்முரை மருது தான்மனை சார்ந்து நாளும்.
நேசமோட மலராமனினை வுடனிருந்தாள் பின்பு
மாசறு சஜ்ஜாபூர் தாசர் வந்தது தெரிந்து சென்று
காசறு தாசர் செய்யுங்கதை விளைய்த்தன்னுர் சென்ருள். (சஉ௯)

சென்றவ ளிருக்கக் காந்தன்றனைப் பெறுதிறலோன் றேர்ந்து
நன்றல துனது செல்வி நடக்கை யென்ற வடந்தைக்குக்
கன்று தலாகக் கூறக் கடிதுதன் மகளைக் கூவி
உன்றன் னியற்கை யூரூர் திரிவதோவெனவுடன்ருன். (ச௩௰)

தாயுமவ்வாறு தன்பாற் சலித்தெதி ருனைக்கவேனு
பாயி யென்றனக்கு வாய்த்த பதியிறந்ததனு லன்றோ
மீயுயர் கதியை வேண்டி விமலசற்குருவைப் போற்ற
ஸாயின னிதனாலே துபழியுள தாகாதென்றாள். (சஉக)

தந்தைதாய் மகள் சொல்வார்த்தை தனக்கிசை யாதுசால
நிந்தையா முன்னு லெங்கட் கெனமகணி ராகரித்தென்
சிந்தையில் விளங்கும் ராமனேதந்தை சீதையே தாய்
முந்தையே யெனவுட் கொண்டேனு மக்கென்னே மொழிவ தென்றாள். (சஙு)

அன்னது கேட்டதாயு மப்பனுமி வளிப்போதியாம்
சொன்னதற் கிசைவுறா தாற்றுணிந்து கொல்வது நன்றென்று
துன்னு தற்கரிய நஞ்சூண்டுய்த்திறக் கொடுத்தாருண்டு
நன்னுதன் மயங்கித் தேர்ந்து நயந்து சற்குருவை யெண்ணி (சஙக)

இப்பொழு தெனக்கபாய மியைந்ததா லெதிர்ந்து நீரோ
தப்பறக் காக்கவேண்டு மெனமனந் தளர்ந் திறந்தாள்
அப்பழு தறிந்து தாசராங்குவந் தருளினேக்க
வெப்பகன்று யிருண்டாகி விழித்தெதிர் குருவைப் பார்த்தாள். (சஙஉ)

உடனெழுந்தவர் தம்பாத முவந்து சேவித்துச்சாமி
விடநுங்கி யிறக்கச் செய்ததாய் தந்தை வேண்டா ரன்றோ
மடனென்று மவரை நீங்கி நுமக்கியான் வழிபாடாற்றல்
கடனென்று தொடர்ந்து சாம்பள் காட்டெனு நகரஞ் சார்ந்தாள். (சஙங)

வசதி யுற்றிருந்த ராமதாசர் பால்மருவுஞ் சீடர்
முசளருத்திர ராமாஜிமுது நலத்தேவதாச
ஜசவந்தகி வாகரப் பானுஜி யெனத்தகு கோசாமி
இசைவுறும் பெயரினோ ராதியர் சிலர்க்கினிமை கூறி (சஙச)

தந்த மூரணுகச் செய்து தாமள காவதிக்கு
வந்தனர் நீங்குறா மன் மருவுறுஞ் சீடரோடும்
இந்திராயணி நீராடி யேத்தரு ஞான தேவர்
சுந்தர சமாதிக்கெய்தித் தொழுதவர் தமைப்பூ சித்து (சஙரு)

மூன்றிராவ வணிற்றங்கி முயலரிகீர்த்தனங்கள்
சான்றவர் வினவப்பாடிச் சார்ந்தனர் கங்காதீரத்
தான்றமை யேகநாத ரடிநிலே யமைத்து நாளும்
தோன் றரசெனும் விருக்கந் துன்னினர் தொழுது வாழ்த்தி (சஙசு)

அங்குமூன் றிரவிராம கதைகளை யருளிச் செய்யத்
தங்குமவ் வேகநாதர் தாசர்முன் னெதிர்ந்துதோன்றிப்
பொங்கு மானந்தத்தோடு புல்லினர் விடையுநல்க
எங்கு நீடவரங் காபாத்தெனு நகரதனைச் சேர்ந்தார். (சஙஎ)

நண்ணலு மாங்கிராமி ராமதாசெனு நல்லோரராம்
அண்ணலார் சீடரோடு மணுகக்கண்டவரைப் போற்றி
எண்ணரு மவ்வூர் நீங்கியேகும் போதினிற்சிவூர்வாழ்
புண்ணியப் பயினுபாயி புனிதர் செய்கதையைக்கேட்டு. (சஙஅ

நெடிதுறு பாசமெல்லா நீங்கினன் விரக்திஞானம்
படிவுற்லாகித் தாசர் பாதத்தைப்பணிந்து போற்றிக்
குடிவளர் தன்னூர் மேவக் கொடுசென்று வதியச்செய்து
முடிவுறு சோடசோப சாரமு முயன்றுசெய்து (௪௯௯)

எனக்குப தேசநல்க வேண்டுமென் றிரந்து நிற்க
மனப்பரி சுத்தந்தேர்ந்து மகிழ்ந்துப தேசநல்கி
இனத்துட னவடன்வீட்டி லொன்பது நாளிருந்து
கனத்தரி கதைகள்செய்து டாங்களி நகர்கலந்தார். (௫௰)

ஆயிடை யனுமார்கோயி லடைந்துபூ சித்துப்போற்றி
மேயபஞ்ச வடிக்கெய்தி மேவிராம குண்டந்தோய்ந்து
தாயன ராமமூர்த்தி தான்வளர் கோயில் சார்ந்து
தூயசோட சோபசார முஞ்செய்து தொழுதார் மன்றே. (௫௰௧)

ஆங்கனே கஞ்சுலோக மமைத்துக்கீர்த் தனங்கள்பாடிப்
பாங்குளோ ரெவருங்கேட்டுப் பரவசமாகச் சாமம்
நான்கினு முதயகால நண்ணுறு போதுசாமிக்
கோங்குமா ரதிசெய்தியார்க்கு முறுபிரசாதந் தந்தார். (௫௰௨)

இப்படிக் காகமூன்று நாள்வரை யிருந்துசாமி
மெய்ப்படி தழுவிப்போற்றி விடைபெற்றுத் தம்மைத் தேடும்
ஒப்பிலாச் சிவாஜிராஜ னுத்தியா னத்தைச்சேர்ந்தார்
தப்பில்பல் வியங்களோங்க வனுமகே தனந் தழைக்க. (௫௰௩)

வேறு.

தனது தேசிகரெய்து சேதிசிவாஜிதா னறிவுற்றுடன்
அனகர் பாலணிகங்கள் சூழ்வர வடிகளா னடையாகவே
வனநெருங் குழியனும நன்கொடி வளர்தல் கண்டு வணங்கிவந்
துனலருந்தவ யோகர்தாளிடை யுற்று வந்து வணங்கினன். (௫௰௪)

பூசையாவு மியற்றி நீணிழல் பொருக ளிற்றணி யாதனத்
தாசைகூர விராமதாசரை யமர வைத்தழ காகவெ
ஓசை நீடிய பல்வியங் களொடு றுமமைச்சர்க ளெண்மரும்
தேசை மேவிய தானும் வெண்கவரிக் குலங்கை சிறக்கவே. (௫௰௫)

கொண்டு வீசி நகர்க்குள் வந்து குலாவு வீதியு லாவியற்
கண்டு தன்னரண் மனைகொணர்ந் தொருகவின் மணிப்பொல ஞசனத்
தண்டுறும் படிசெய்து சோட சவகைகளா முபசாரமும்
மண்டு மாறு புரிந்து போன கவகையு முண்ண வழங்கினன். (௫௰௬)

தாசர்தம்மொடு கூடலாகிய சதுமறைக் குலர்தம்முடன்
நேசமோடினி துண்டிராவி னிகழ்த்தினு ரரிகீர்த்தனம்
தேசதா முதயத்தி லாரதி செய்து தீர்த்தனை வாழ்த்திபுல்
லாசமாக வெவர்க்கு நன்பிரசாத நல்கின ரமையவே. (௫௰௭)

உடனெழுந்துறு பீடமோடு வனத்துறைந்து சிஞள் கழீஇத்
தடனெருங்கிய சாம்பள் கோரொனு மூர்புகுந்து தழைக்கநீள்
அடன்மிகுந் துளராம மூர்த்தியை யங்கமைக்க நினைத்துடன்
றிடனிறைந் தனவாயு மைந்தரை யெண்ணினரருள் செய்யவே. (௫௰௮)

எண்ணருந் திறல்வாயு மைந்தனெதிர்ந்து நின்றவ ணேழுகோ
சண்ணுதூரம் விராவு மூரில மர்ந்த ராமநன் மூர்த்தியை
நண்ணி நீ கொடுவந்து தாபியென்று நவின்று மறைந்தனர்
கண்ணு தாசரி ராவினிற்றனியே புகுந்தனர் கவரவே (சசக)

சென்ற வூரிலொர் கோயிலிற் குளமர்ந்த சீதையி ராமனோ
டொன்றி லக்குவ னனுமனென்பவரைக்கொ டெய்தின ருறைவிடத்
தன்று வைகறை கோயிலிற் குளிலாமை தேறிய வூருளோர்
துன்று விக்கிரகங்களைக் கொடுதுன்னினொ ரெவரென்னவே (சரு௰)

தேடிவந்தொரு ராமதாச ரிருப்பிடத்தவை சேர்தல்கண்
டோடி நீருல காளு மன்னவனுக்கு மெய்க்குரு வர்யுளீர்
ஈடி லிக்கள வைப்புரிந் திடலேற்குமோ பெருமைக்கென
நாடியொன்று நவின்றிலார்தனி நண்ணினார் குருநாதரோ. (சருக)

வந்த யாவரும் வாய்திறந்திலரொன் கொலோ வெனமலை வுறார்
நந்தம் விக்கிரகங்களைக்கொடு நண்ணுவோமென வெண்ணியே
தந்த மெய்த்திறல் கொண்டு பற்பலர் தாமெடுத்தனர் தாவிலா
அந்த விக்கிரகங்கள் சற்றுமசைந்திலா துறலானவே (சருஉ)

ஆதல் கண்டு சுவாமிகட் கிவணமரவேதிரு வுள்ளமென்
றோதல் செய்து பயந்து தாசரை யுறமதித் துமையோர் கிலா
தேதமாக விகழ்ந்ததைப் பொறுமென்று நின்றினி தேத்தியே
பாதநன்கு பணிந்துபோயினர் பின்புதாசர் பராவவே. (சருங)

ஆலயஞ் செயவெண்ணி யூரின ராலமைத்துள கோயிலிற்
சாலமங்கல நாடெரிந்து தனித்தனிக் கிரமத்துடன்
மூலவிக்கிரகங்களைப் பிரதிட்டை செய்து முனோர்கள் செய்
கோலம் யாவு மியற்றி வேதியர்குழு மிசைந்திடவுஞ் செய்தார். (சருச)

கோயின்மேவிய ராமனைக் களிகொண்டுதம் விழிகுளிரநன்
காயிருந்தது கண்டுதோத்திர மன்பினேத்தின ராயுறத்
தாயிலன்பு கொடங்கு நின்றுதனித் தெழுந்து தழீஇ யினோன்
வேயின் மன்னிய தோள்விதேக மடந்தையோடு விளங்குவான். (சருரு)

அன்று ராத்திரி மண்டபத்தில மர்ந்து தாளமும் வீணையும்
துன்று மத்தளமுந் தொனிக்க வியம்புதோ மறுகீர்த்தனம்
நின்றுபாடினர் கேட்டியாவரு நிமலராமனை நினைவுகொண்
டொன்றினார் பரவச மிராமுடிவாக நேருத யத்திலே. (சருசு)

மங்களா ரதிசெய்து சாமியை வாழ்த்தி வண்பிரசாதமும்
பொங்க வாவினர் யாவரும் பெறநல்கி யிவ்வகை புரையிலார்
அங்களாவினர் நாலு நாளள வாகவுற்சவ மானபின்
தங்கலாகிய வூர்வலஞ் செய்து கண்ணமா நதிசார்ந்தனர். (சருஎ)

வேறு.

நதிக்கரை சார்வனத் தமர்த்த நாளினிடைட் டாங்களியின யந்துமுன்னே
பதித்தவனு மாரையன்றிப் பதினொரிடத் தனுமாரைப் பதிக்கவேண்டி
மதிப்பினுயர் சாம்பள காட்டொடு சிங்கண புரஞ்சீர்ம சூர்சஹாபூர்
துதிக்கு முமரடி சாதாராபத்தி சுசிராளே ஜராடா டேம்பி. (சருஅ)

நவகா வெற்பூர்ண பாகுவில் விளங்கத் தங்கையான யந்திருத்தி
உவமையில் வேதோக்தமாய்ச் சோடசோபசா ரங்களு ஞற்றிபோற்றித்
தவலறு மிப்பதி ஞெரிடத்தே தேனுமோரிடத்தைச் சார்ந்த மர்ந்த
பவனகு மாரனைப் பதினாறு தினம்பூசித்தவர் தம்பத்திக் கேற்க (சஙுகூ)

மனோரத மேதது சித்தியாகு மிதற்கைய மில்லையென்று வாழ்த்திப்
பனுளுமிடை விடாதுதினம் பூசிக்கத்தம் பாங்கர் பயிலுஞ் சீடர்
இனுரி ஞரிவ் வூரிலிருக்கவென நியமித்தவ் விடத்தை நீங்கிக்
கனுவிலுஞ் சீராரிநாமங் கருதார் வாழூர் கலந்து கருதலாக. (சசூ0)

அங்கங்குங் கீர்த்தனை செய்தரி பக்தி மிகுவித்தா ராகிப் பின்பு
பொங்குந் தன் சீடரொடு சாம்பள காட்டென்று மூர்போந்தங்கேமுன்
தங்க நிறுவிய ஃகாயிற் சார்ந்துரகு குலதிலகன்றனைக் கண்டேத்தி
மங்களஞ்சேர் ஸ்ரீராம நவமி யுற்சவஞ் சமீ பித்துவாய்க்க. (சசூக)

தெரிந்தடைவே நடத்தவெண்ணித் தொடங்குங்காற்சிவாஜியங்குத் தேடிவந்து
பரிந்துதன தாரியனைத் தரிசித்துப் பூசித்துப்பணிந்து போற்ற
விரிந்தசிறப் புளதாக நவமி விழாவிண்ணோரும் விரும்பிக்காணப்
புரிந்தொன் பானுளும்பத்தா நாளிலே லலிதம் பொருந்தச்செய்து (சசூஉ)

வேதியர் போஜன முதலாகிய வெல்லாஞ் செய்துவிடை வேந்தற்கீந்து
ஏதிலாச் சீடருட னிருந்தருங்காலனு மந்தஜயந்திசோ
சோதியலா தந்தவுற்சவம் புரியத் திருவுள்ளங் கொண்டுதம்மால்
ஆதியிலே பிரதிஷ்டை யாக்குபதி ஞேருரு மமைவதாக்கி. (சசூங)

பதினொரு ராமதாசராய் நாளு நாளுற்சவமும் பயின்றங்கங்கே
முதிராரி கீர்த்தனஞ்செய்து ராமநாமப் பெருமை மொழிந்து பல்லா
றெதிரிலிருந்த நாமத்தை யாரெந்தத் தொழிலியற்றி யியம்பினுலும்
கதிதருஞ்சீர்ச்சமாதி நிஷ்டை கலந்தவனு முண்கின்ற கவளந்தோறும். (சசூச)

ராமநாமம்புகல் வானெனிலவனே நித்யவுபவாசி நாளும்
சோமற நன்கிடை விடாதியம்புவனேலவன் முழுமட்சுசொல்லு கின்ற
நாமம் லபிக்கிறதற்கும் ராமனருள் பெறுதற்கு நயந்து வங்கூழ்
மாமகறரு முதலிலடியானுகியவர் தமருள் வாய்த்தல் வேண்டும். (சசூரு)

மருத்து மகனருள்பெற விடிலெந்தக்காரியமும் வாய்ப்புறுதென்
றருத்தியுறு சகல சுரோதாக்களையும் பார்த்துபதேசஞ் செய்தென்றும்
திருத்தமுற நிலைப்பித்துச் சாமிக்காரதி செய்து திகழ்ப்ரசாதம்
பெருத்தவடியார்க்கெல்லா முதவிப்பின்பெயர்ந்து கோலாபூர் வந்தார். (சசூசா)

அங்குமரிகதை செய்து சந்திரகிரியடைந் தந்தமலையிலேறித்
தங்குதலாயினர் மூன்று மாதவரை தினமு மரிகதைகள் சாற்றிப்
பொங்கு கடலணை செய்த நளகபிதானுறை விடமும் பொருந்தக்கண்டு
மங்குறக் கோல்ஹாசுரனை வதைத்தமலர் மகடனையும் வந்தித்தேத்தி. (சசூஎ)

தவிராது பகுளமெனுந் தேவாலயந்தனையுந் தரிசித்தேத்திப்
புவிபோற்றும் ரங்காளம் பத்மாள மெனுஞ்சரோ வரம்புகுந்து
செவிதாக நிராடியங்க கன்றுத்தரதிசையிற் சென்று சீர்சான்
றவிர் நீடுபஞ்ச கங்கையும் படிந்து மார்க்கண்டரங்கலாதி. (சசூஅ)

இமாசலம் ரத்நாகர மென்றிசைக் கத்தென்றிசையிலுள்ள தலங்களெல்லாம்
நமாவெனக்கண்டுறு சீடர் பலருடனு மரணியத்தினண்ணி யோர்சார்
தமாதரங் கொண்டுறப்பாத சேவை செய்தக்காபாயிதங்கச் சீடர்
அமாடுணவு சமைத்திருக்கும் போதின் மாவுலி நகரிலமர்ந்த சீடர். (சசுக

ஆனவுத்தவ கோசாமி வீணை மிருதங்கந்தாளங்க ளார்ப்பக்
கானமுடன் கீர்த்தனை செய்காலத்திலெளரங் காபாத்தைக் காக்கும்
கோனனிக மவ்வூரிற் சிலபயிலக் கூடவுறை யனிகக்கோனும்
ஊனமிலாக்கதை கேட்டங்குறுவோரோடிருந்து கேட்டுற்றபோது. (சஎ0)

உத்தவ கோசாமி யெல்லாருங்கேட்க ஸ்ரீ ராமமூர்த்தியேதான்
மெய்த்த பரத்துவ மாதிகர்த்தாவென்றுறுதி பெற விளம்பக்கேட்டுப்
பைத்தவனிகத்தலைவன் பொருறுகிப் படாணிக்ளைப் பார்த்து நீவிர்
இத்தகுதிபுகல்வோனைப் பிணித்துக்கொண்டெய்து மின்களென்றுபோனான். ()

தலைவனே வலும் வீரர்தா முத்தவ கோசாமி தமைப்பிணித்தங்
குலைவுறக்கொண்டுடன் போந்து தம்மனி கத்தலைவன் முன்னே யுய்த்துநிற்கத்
தொலைவிலனிகத் தலைவன் காஜியைக் கூய்ச்சுன்னத்து செயுமா சொன்னான்
கலையு மனத்தினராகி யுத்தவ கோசாமி யவன் கருத்தை யோர்ந்து. (சஎஉ)

இவனிவ்வாறி யற்றுவனே னமது குலாசார நலமிழிவாமே யென்
றவணிளைந்தார் சத்குருவாகிய ராமதாசரை யிவ்வாபத்தைப் போக்
குவதுமக்குக் கடனென்று பலபடி தோத்திரஞ் செய்ய வுளத் துணர்ந்தார்
பவர்பொழிலி லுறைதாசருட னெழுந்தார் தெரிந்தக் காபாயி கூறும். (சஎஙு)

தேவரீ ரிவ்விரைவு கொடுபோவ தெங்கென்னத் தெரிந்த தாசர்
மாவலிய துலுக்கர் கணமுத்தவ கோசாமி தனைவருத்துகின்றார்
ஆவையின் மற்றதற்காகப் போகவேண்டிய தென்றங்கவள் கண்ணுக்குத்
தாவருந்தம் முருத்தோன்ற தெய்தினர் மாருதி ரூபந்தனைக் கொண்டாங்கே.()

மேவியுலகெலாங் நடுங்கவார்த்துச் சேனைபதியை வெகுண்டோர் கையால்
ஆவிபோகா தறையவ வனயர்ந்து கீழ்வீழ்ந்தங் கறிவு தோன்றிப்
பாவிசெய்த பிழை பொறுக் கென்றிரு கரத்திற் சலாஞ் செய்யப் பரிந்து தாசர்
தீவினையோன் முன்பறியத்தேசி கோத்தம வடிவாய்த் திகழ்ந்து நின்றார்.(சஎடு

கண்டவனீர் கடவுள் வடிவென்றுணரோ னெனப்பலவுங் கழறிப்போற்றித்
தொண்ட னெனப் பாதத்திற் றொழுது நிற்கத் தாசரரு டோன்ற நோக்கி
மண்டலத் திலரி நாமகீர்த்தனஞ் செய்வோர்தமை யுமறை வல்லோரோ
டண்டிய கோக்களையு மினி நீவருத்தேல் கோயில் களுமழிவு செய்யேல்(சஎசு)

என்றவனுக் கினிதாக மதிகூறி யுத்தவ கோசாமி யென்போர்
ஒன்றவுடன் கொண்டன்னார் கீர்த்தனஞ் செய்வயின் மேவியொரு நாளங்கே
நன்றமர்ந்து சாம்பள கோரொனு மூரி னண்ணியங் கிராம மூர்த்தி
மன்றன் மலர்ப்பதம் பணிந்தங் குறைசீடர் தமைநோக்கி மகிழச் சொன்னார்.()

நீவிருல கெலாஞ் சென்றங்கங்கே நன்கரி குணங்கணி ரம்பப் பாடித்
தாவிலது ஜடமூடர்தா முய்யச்செய்மி னெனத் தவறி லன்னார்
மேவின ரவ்விடங்க டொறும் பலருக்கு முபதேசம் விரும்பச் செய்தும்
ஓவில் பலமடங்களையு நியமித்துத் தாசர் வழியுறப் புரிந்தார். (சஎஅ)

வேறு.

அக்காலமதிற் சீர்திகழ் பாகா நகரத்தில்
தக்கா ரொனவுள ரானவர் சாந்தம் பெறுசிலர்
மிக்கார் வயிராகத் திடைமிகு ஞானமொ டன்பும்
தொக்காரவர் பெயர் கேசவ சாமியெனச் சொலவே. (சஎகூ)

அன்னா ரினதாசர்க் குளவாகும் பெருமைகளைப்
பன்னாளும் வினவிப் பயபக்தித் திறமேவி
என்னா லவரைப் போய்த்தரி சிக்கப் பலவீனம்
தன்னாலமை யாதே யெனத்தளர்ந்தா ரொருதாமே. (சஅ0)

உலகந்தனை யுய்யச் செயவொளிர் சற்குரு சேவைக்
கிலகுந் தவமில னாகிய யான்செய்வதெ னென்னாப்
பலவுங் கருதின ராகியொர் சீடன்றனைப் பார்த்து
நலசாம்பள கோர்வாழ்வுறு நயசற்குரு பானீ (சஅக)

சென்றீந் திதைவரு வாயெனத் தேரத்து விதமதாய்
ஒன்றும்படி விண்ணப்பம் வரைந்தொன்றுட னுதவித்
துன்றும் வழிச்செலவுக் கரைப்படி தண்டுலந்துன்ன
அன்றங் கவனுக்கீந்தனுப் பப்போந்தனனன்னான். (சஅஉ)

தம்மாற்புரி சாஷ்டாங்க வந்தனஞ்சொல் கெனச்சாற்றற்
கம்மா நகர் ஒருநாள் பதினைந்துந் தருமரிசிக்
கெம்மாறு மில்லாமற் பெறலெய்தித்தடை யிலனாய்
இம்மா நகர் வந்தாரியரிருக்கும்பதி சேர்ந்தான். (சஅங)

நீராடி நனியமங்களு நிறை வேறினராகிச்
சீராமன துயர் கோயிலிலுறு போதவன் சேர்ந்து
பாரார்வுற வட்டாங்கமு மிகுமன்பொடு பணிந்தான்
நேராயுத வியபத்திரமுனம் வைத்தெதிர் நின்றான். (சஅச)

நின்றான் முகநோக்கிப்புகு நீராருதவியதார்
என்றாரெதிர் நின்றானலனேய் கேசவசாமி
தன்றாசனடைந்தேனவர் தருபத்திர மிதுநும்
பொன்றாளடி களுக்கன்பொடு புகன்றார் பணிவென்றான். (சஅரு)

ராமன்பத நேயத்தினர் நனி நன்றெனவதனிற்
றாமன்புறவரை வுற்றிடு தகவின்புற வோர்ந்து
தாமன்பதியிடை முத்தின மவன் வைகுறச்சொல்லிப்
பூமன்னவணுகிப்பணி புரிவோர்க்குறப்பு கன்று. (சஅசு)

வருவேதியன் மகிழப்பல வஸ்திராபரணங்கள்
தருமாபுரிந்தே பத்திரந்தாமொன்றெதி ரெழுதி
ஒருகேசவசாமிக்கினி தெதிர்வந்தன முரைத்தின்
அருளாலொரு வேளைக்குணுமது தந்தனுப்பினரே. (சஅஎ)

விடைபெற்றுறு மவ்வேதியன் மிளிர் கேசவசாமி
புடையுற்றிவர்புரி வுற்றன யாவுந்தனி புகலா
இடையுற்றில தொரு வேளையினுண வீந்தது மென்றான்
அடைவுற்றனர் மிகுமாமகிழக் கேசவசாமி. (சஅஅ)

வேறு

தாசரருள் பெற்றறிவ தங்குகிர்ஷ்ணாஜி
நேசமொனு நாவிதர் நெடும்பக லுமையம்
கூசமில தேற்றினிதி னுண்டுகுறி கொண்டு
மாசகல வன்பர்கள் வழுத்திவரு போதம். (சஅகூ

ஆகிய கிரந்தமதை யத்தியய னஞ்செய்
யோகியவர் தம்பெருமை யோர்ந்தவொரு பார்ப்பான்
நாகில்ஜய ராமனெனு நாமனவை யாவும்
போகியுயர் பண்டித னடுத்திது புகன்றான். (சகூ0)

உம்மிலுயர் ஞானிய ரிலாமையுணர் வுற்றும்
தம்மிலுறு வேனறிவு தங்கவுபதேசம்
செய்ம்மினென நாவிதனை வந்தனைசெய் துற்றான்
இம்மிகை தகாதென விணங்கில ரிசைப்பார். (சகூக)

நானிழி குலத்திலுறு நாவித னெனச்செம்
மானுரிகொ ணூலணியு மார்பினர் குலத்தீர்
ஆனிர்பணியத் தகுவதன் றதுவுமன்றி
யானுமுப தேசமரு ளத்தகுவ தன்றால் (சகூஉ)

எனதுகுரு வாகியியல் கின்றவரிடத்தில்
மனதொருமை யாயடி வணங்கியுப தேசம்
கனமதுற நீர்பெறுக வென்றுகனி வாகப்
பனவனிடை யோதினர் பலாறவ னுரைப்பான். (சகூக)

திரிகரண சுத்தியொடு தேசிகரின் மிக்க
பெரியர்நுமை யன்றியிலை யென்றுமடி பேணிப்
பரிவதிலை யாகிய வெனன்புபிறர் பக்கம்
புரிவதுறு மோவெனலு நாவிதர் பொருந்தார். (சகூச)

யாதினி யியற்றுவ தெனச்சிறிது ளெண்ணி
வேதியனை ராமனடி யார்தமுழை மேவத்
தீதில தழைத்தருகு சென்றுகுரு நாதர்
போதிலினி தாகியவர் பொன்னடி வணங்கி. (சகூரு)

பண்டிதன் மனத்திலுறு பாவமதை யோதக்
கண்டிதென வேதியர் கணிற்பெருவ தன்றித்
தண்டிலுப தேசமிகு தாழ்வின னிடத்தோ
அண்டியுறல் வேதியர் குலத்தவத ரித்தோய் (சகூசா)

வெகுஜன விரோதமிது வென்றுசில நீதித்
தகுதிமொழி கூறினர் தடைப்பதை விறைவான்
தொகுதரு நலன்பொடு திதுத்தடி பிடித்து
நெகுகருணை யோடருள னீரருளு கென்றான். (சகூஎ)

அவனது மனத்திட மறிந்துகுரு நாதர்
உவமையறு நாவிதனை நோக்கியுப தேசம்
இவனுற வளித்தியினி தென்றனரு டன்றம்
பவனமுற வேதியனோ டேகினர் பணிந்தே. (சகூஅ)

நண்ணிவிதி யாயினிதிராமனடி பூசை
பண்ணியுப தேசமறை யைப்பகர்தல் செய்தார்
எண்ணிமுதிர் பண்டிதனி னங்குருசேவை
கண்ணிய னுள்பரக திக்கணவர் சென்றார். (சகக)

நாவிதகொ சாமியுயர் நற்கதியை நண்ணத்
தாவில்ஜய ராமனவர் தாந்தகன மாகத்
தீவிதி முடித்துவிதி செய்கைக ளுமுற்றி
மேவியவ ணிற்றுளவ நந்தனம்வி ளைத்தார். (௫௦)

அவர்விரவு பாதுகையை யவ்வயி னமைத்தத்
தவர்திதியொ டாதிபல சற்கிரியை முற்ற
எவர்வயினு மையமதெடுத்தெவையு மெய்த
இவர்வது புரிந்துகுரு நாதரிடை யேகி (௫௧)

வந்தனை புரிந்தெனது வண்குருவி னுக்கு
முந்துதிதி செய்யவருள் கென்றுமொழி யக்கேட்
டந்தமறு பேரறிஞர் நீயயர்தல் கண்டால்
நிந்தனைசெய் வார்பனவர் நேருணவு வேண்டார். (௫௨)

ஆயினு மிராமனரு ளானிறைவ தாகும்
ஏயினநி னன்புகொடி யற்றலிக வாமல்
போயினி தியற்றுகென வின்னருள் புரிந்தார்
மேயின னியற்றுமிடை வேதியர்வி ராவி. (௫௩)

உண்டிநுகர் கிற்கவரு கென்னமறை யோரும்
மண்டின ரிருப்புழி மடைச்செயன் முடித்துக்
கொண்டினிது தன்குரு குலாவுறுச மாதிக்
கண்டிவிதி யோடுபுரி பூசைசெய லானார். (௫௪)

ஆனது தெரிந்துமறை யந்தணரொலாரும்
ஞானகுரு ஜீவனொடு நண்ணிவிவன் யாவர்க்
கூனமறு நற்றிதி யுஞற்றுதலெ னுவங்
கீனமில தெண்ணுபொழு திற்சில ரிசைப்பார். (௫௫)

நாவித னிடத்திலுப தேசமிவ னண்ணி
ஆவியவன்விட் டதனி லன்னவனை யெண்ணித்
தாவிலது புண்யதிதி தன்னையியல் கிற்க
மேவியது போலுமென மெய்யெனவெ லாரும் (௫௬)

இந்தமறை யோன்மிகவி ழிந்தகுல வீனன்
நந்தமை யுணற்குவரு கென்றவிது நன்றோ
வந்தது தகாதென வெழுந்துசெல மற்றவ்
வந்தண னினைந்துதன தாரியனை யெண்ண (௫௭)

அவ்வயி னறிந்துட னடைந்துகுரு நாதர்
எவ்வமற நிற்கமறை யந்தண ரொலோரும்
இவ்வயினி வந்தண னியற்றுவது நன்றோ
செவ்வயினி றென்றுமுறை செப்பினர் சினந்தே (௫௮)

யாமிவ னகத்திலுண வெங்கள்விழி காணத்
தோமிலொரு மெய்ச்செயல் விளங்கிலது தொட்டு
நாமிசைவ மென்றனர் நயந்துகுரு நாத
சாமியிரு மென்றக நுழைந்துஜய ராமன். (௫௱கூ)

தன்னொடு புறத்துவர லுந்தசர தன்சேய்
துன்னுஜய ராமனது தோளிடை துலங்க
மன்னுகுரு தம்மிடையின் மாருதி விளங்க
நன்னர்விழி கண்டனர் நயந்தனர் வியந்தே (௫௱ம)

மாலையடன் மாருதியை வந்தனைசெய் துற்ற
மாலையொழி வித்துள மகிழ்ந்துதிதி தானும்
மாலையுற முற்றியபி னுண்டுமகிழ் கந்தம்
மாலையடை தக்கணை வழங்கமகிழ் வுற்றார். (௫௱மக)

வேறு

பின்பிராம தாசர்சீடர் பெரிதுமேவ வொருவனத்
தின்பினோடு சென்றுநாளும் ராமநாம மிடைவிடார்
அன்புகொண்டு மேவுநாளின் மீளமாத மதனினோர்
முன்புவார மமரபக்க மொழிசதுர்த்த சித்திதி (௫௱மஉ)

ஆவதாக வைகறைக்க ணுடிநீ ரமர்ந்தபின்
மேவலான நீரிலாடி மேவல்கண்டு பாயியென்
றேவல்செய்யு நங்கைமீண்டு மேன்புனற்க ணுடிநீர்
தேவரீ ரொனப்பணிந்து நிற்கவீது செப்புவார். (௫௱மக)

என்ன தண்ணரின் றிராம னெழிலடிக் கண்மேவினார்
அன்னதைக் குறித்துவேத மறையு நீதிவழுவுறா
துன்னி மீண்டுமாடி யைந்திரண்டு நாளுமுறைகுவேன்
மன்னு சூதகத்திலென்னும் வேலைமன்னன் வந்தனன். (௫௱மச)

வந்திராமதாசர்தாள் பணிந்துநிற்க மன்னவா
முந்தெனண்ணர் பரமதான மோக்கமேவி னாரதால்
ஐந்திரண்டு நாளதான சூதகம் மடுத்துளேன்
இந்தநீவி ரினிதுசென்று சாம்பள்கோமொ னகரிலே. (௫௱மரு)

நயரதேய னவமியுற் சவஞ்செயச் சமைந்துநன்
கயர்திர்முற் றுறுந்தினத்தி லடைவெனங்கி யானெனு
நயமதாக விடைகொடுக்க நன்றுநன் றெனவிரைந்
துயர்குணத்தி னடியரோடு நிருபனூரு ளுற்றனன். (௫௱மசு)

நண்ணுமேவ லாளர்கூட நவமியுற்சவந்தனைப்
பண்ணுநாடி னந்தினம் பராவுவேதியர்க்குணா
உண்ணுகின்ற வதிலுமற்றை யெதிலுமொன்றும் வழுவுறா
தண்ணு மாவி யற்றிமுற்று மளவின்மேவி னாரரோ. (௫௱மஎ)

மேவிராம தாசர்கண்டு லலிதமா விழாவயர்ந்
தோவில் சற்சனர்க்கெலா முகந்துபோக விடைகொடுத்
தேவிமேவு வேந்தனுக்கும் விடைகொடுத் திருந்தனர்
தாவின்மன்ன னென்றுசிந்தை தனினினைந்து போயினன். (௫௱மஅ)

வேறு.

பாளிக டெனுமலை யதனிற் பண்புசால்
குரவருக் கொருமடங் குறித்துக் கட்டினன்
விரவினரிருக்க மற்றவரின் மேவினன்
வரவினி தழைத்தனன் குரசர் மன்னவர். (ருயக)

வனத்துறல் வேண்டிய வென்னை மாநகர்
தனிற்புரி மடத்துற வேண்டறக்கதோ
எனப்புரவலன் பணிந்தெனதுளத்தவா
வினத்தை யானடைய நீரியற்றல் வேண்டுமே.. (ருஉய)

என்றினி தேத்தின னிசைந்த தாசனா
நன்றவ னுறக்கொடு நண்ணிவெற்பிடை
நின்றநல் லரியணை யுயர்த்திப் பூசனை
மன்ற வெண்ணிரண்டுமே வகுத்துப் போற்றினன்.. (ருஉக)

இலக்கம் வேதியர்க் குணவினிதி னீந்திராக்
கலக்கமா தாசர்கால் பிடிக்கக் கண்டுயில்
விலக்கின ராசனை நோக்கி வேந்தநீ
தலத்துயர் தவகுணத் தடியர் தம்மொடும். (ருஉஉ)

தேகுவாழ் வுறுந்துகா ராமர் சேர்வுற
வாகுடனழைக்கென மன்னன் முன்னமே
போகுறத் தூதனைப் போக்கினேனெனா
யோகுறு பெருந்தவ ருடனிருந்தனன். (ருஉங)

அருந்தவத்துறு துகாரா மவன்பரும்
பெருந்தவர் தமைக்கண்டு போற்றப்பேணினர்
இருந்தபன் னூல்வரோ டெழுந்து பின்னரும்
வருந்திருமாலடி யாருமன்னவே. (ருஉச)

காவலன்றெரிந் தெதிர்கொண்டு கண்டவர்
யாவரும்வர வுபசரித் தின்பாகவே
மேவருந் தாசர்பா லழைத்து மேவலும்
தாவருந் தவத்துகா ராமர் சார்ந்தரோ. (ருஉரு)

ராமதாசனை யெதிர்நோக்கி நன்கவர்
தாமகிழ்வாகச் சாஷ்டாங்க வந்தனம்
காமரு தாள்களிற் புரியக் கண்டுடன்
மாமரு மார்புற மகிழ்ந் தணைத்தனர். (ருஉசா)

இவ்வகை வந்தசா துக்களுக்கெலாம்
மெய்வகையுறத் தழீஇ வியந்திருந்துழிச்
செய்வகை திருந்து மண்டபத்துச் சேர்ந்துள
பொய்வகை தவிர் மறைய வர்க்குப் போஜனம். (ருஉஎ)

தந்த பின் கங்குல்வாய் தவறில் வேந்தனை
அந்த மிலருந்த வத்தறிஞர் நோக்கி நீ
முந்தரி கீர்த்தன மொழி கென் றோதினர்
வந்தது நினைத்த தென்று வந்து மன்னவன். (ருஉஅ)

நெடும் பகனிளைந்தது நிறைய நேமகத்
திடுங்குரு நாதரை யெதிர் சத்துக்களை
நடுங்கலி லன்பொடு பணிந்து கந்தெழீஇ
நடும்படி சதங்கைகள் காலினண்ணவே. (ருஉகூ)

வனைந்தனன் மிருதங்கந்தாளம் வாய்ந்த யாழ்
புனைந்தெதிர் நின்றரி புகழ் விரித்தனன்
நினைந்தது வினவினரவச நேர்ந்தனர்
கனைந்துறப் பாடலைக்கண்டு தேசிகர். (ருகூ0)

வேந்தனை யோரிடத்திருக்க நல்விடை
ஈந்தனர் வேணுபாயியை யழைத்தவண்
வாய்ந்தரி கதை செய வகுக்க மற்றவர்
ஆய்ந்தரி கீர்த்தனத்தவச மாக்கினர். (ருகூக)

புலரியிலாரதி புரிந்தெலோருக்கும்
நலனுற நற்பிரசாத நல்கினர்
மலர் மறுதினத்திராமருவு மண்டபம்
குலவக்காபாயியைப் பாடக் கூறினர். (ருகூஉ)

அந்தமாபாயி கீர்த்தனஞ் செய்தானந்த
பந்த மூழ்குறச் செயப்பகினு பாயியை
முந்து கீர்த்தனஞ்செய மொழிந்துவாமன
மைந்து கோசாமியை வகுக்கச் செய்தனர். (ருகூகூ)

வைகறையாரதி நிரப்பி மற்றைநாள்
எய்துறு நிம்பராஜரை யிசைத்தனர்
ஐதரி கீர்த்தன மயரச்செய்து பின்
மெய்தரு ரங்கசாமி கோசாமியையே. (ருகூச)

திருமகள் கேள்வனைப் புகழச்செய்து பின்
வரு ஜயராம கோசாமி வாழ்த்தலாய்
அருள் கலியாண கோசாமி யன்புடன்
பெருகுறக் கீர்த்தனம் புரியப்பேசியே. (ருகூரு)

மேமநாபா கோசாமி சொலவுஞ்சிவ
ராமகோசாமியு நவிலச்செய்து பின்
பாமடிய வரெலாம் பாடச்செய்து பின்
நாமராகிய துகாராமசாமியை. (ருகூசு)

ஹரிகதை புரிகென வருளவன் பினிற்
பெரியவர் சமர்த்தரைப் பணிந்து பேசினர்
தெரியரி கீர்த்தன மவசஞ் சேரவே
விரிபுகழ்த் தாசரோ யாதிமேவினோர். (ருகூஎ)

தாமுமப்ப ரவசந் தனிற்புகுந் தொளி
மாமுத லெழுந்தது மறந்து கீர்த்தனம்
நாமுத லுறநனி நவின்று நின்றனர்
ஆமுதற் காரண னங்குத் தோன்றினன். (ருகூஅ)

சகுண ரூபத்தொடு சார்ந்த ராமனும்
தகு குணத்துயர் துகாரா மனைத் தழீஇ
மிகுநலத் தனது கீர்த்தனம் வினவிநேர்
புகுபொழு துணர்ந்தில னெனும் போந்தென.
(௫௯)

விரைவினி லாரதி புரிய மெய்தழீஇ
உரைசெய்து மறைந்தன னுணர்த்தி யாவரும்
கரை செயற் கருமகிழ்க் கடலின் மூழ்கினர்
புரைதெறு புகழ்த்து காராமர் போற்றினர்.
(௬0)

மங்களா ரதிதனை வகுத்துத் தாசரை
நன்கடி பணிதலுந் தழுவி ராமதாஸ்
அங்கவரிடைப் பெரிதன்பு சான்றனர்
தங்கெவர்க்கும் பிரசாத நல்கினர்.
(௬௧)

நண்ணிய மறுதினம் ராமதாசரோ
புண்ணிய ஹரிகதை புகன்று நின்றனர்
தண்ணிய மலரயனுதி தாவிலா
விண்ணினர் பரவசந் தாமு மேவவே.
(௬௨)

நண்ணிய வுதயத்தி னுதற் காரதி
பண்ணினராய்ப் பிரசாதம் பாத்தனர்
எண்ணினர் தினந்து காராமரின் புறப்
புண்ணிய கீர்த்தனம் புகலச் சொல்லினர்.
(௬௩)

மதிவரை துதிது காராமர் மாண்புடன்
துதி ஹரிகீர்த்தனஞ் சொல்லி வாழ்ந்தனர்
பதியெதிர் சாதுக்கள் பாதபூசைசெய்
ததிமகிழ் வுறவணி யாடை நல்கினன்.
(௬௪)

சாது சற்சன ரொலாந் தழுவலாகிய
ஈதுசற்சனக டென்றெய்தும் பேர்வைத்தார்
போதுவோர் தெரிவுறப் புகன்ற தாசர்பால்
கோதுறுச் சாதுக்கள் விடைகொண் டேகினர்.
(௬௫)

சகலரும் புகழ்த்து காராம சாமிதாம்
மகிபதி தருத குவரிசை தேர்ந்தனர்
மிகுபொருணம் வயின் விரும்பி நல்குவான்
தகுவதன்றெனச் சொலார் தேவுசார்ந்தனர்.
(௬௬)

தராபதி வருது காராம சாமியை
விராவிடை நாடினன் விழியிற் கண்டிலன்
பராவுறு சற்குரு பதங்களைப் பணிந்
திராது போயினர் செயலியம்பு கின்றனன்.
(௬௭)

பற்பல வஸ்திரம் பணிபொன்னுதியா
நற்பயன்றரு நிலநல்க வேண்டினேன்
பொற்ப வென்னிடத் தவர்புகல் கிலாது போய்ச்
சிற்பர னுறைகிருத் தேவு நண்ணினர்.
(௬௮)

என்றனன் வினவிய விராம தாசரும்
நன்றவர் கருத்தென நனிநயந்துவேந்
தன்றனை நோக்கினர் சகலசித்தியும்
ஒன்றரு முத்தியு முவப் புறுமலே.		(ருசக)

பாண்டு ரங்கன் புகழ்பன்ன வேண்டுவோர்
ஈண்டு நீதருவதை யேற்பரோ கொலோ
வேண்டுறு தேகினமொன்று வேந்தநீ
மூண்டுளை நினைவொழி கெனமொழிந் தனர்.		(ருருய)

தரணி காவல னவர்தகவை யெண்ணினன்
சரணிடைப் பணிந்து தன்பதிக்குச் சார்ந்தனன்
அரணியத் தடைந்தனர் தாசராதரித்
திரணிய சற்சனவி ரவிக் கெய்துவார்.		(ருருக)

வேறு.

வனத்திற் செல்லுதன் மீண்டு சற்சன கடுவருதல்
மனத்துக் கொத்தன படியவர் வருமொரு நாளில்
கனத்த சற்சன கடின் முகட்டுறையுமோர் காளி
உனத்தகும் பெருந் தவரிடை நடு நிசியுற்று.		(ருருஉ)

எதிரி னின்றன டாசர் கண்டன்னை நீயாரோ
வதிவதெவ்விடத் தெனவ ளாதிமா மாயை
அதிநலத் தினிம்மலையில் யானிருப்ப திங்கைய
மதிநலத்தினி ரொத்தனை தரமிவண் வந்தும்.		(ருருங)

திரும்பி யென்முகங் கண்டிலிர் கொயிலிற் சேர்ந்து
விரும்பி யென்மிசை நீர்சொலுங் கவிவின வுவதில்
அரும்பு கின்றது காதலென் றனக் கறைகென்னக்
கரும்பு நேர்கவி நாவலர் கட்டுரைக் கின்றார்.		(ருருச)

அம்மை நின்கழுத் தணிமணி மாலையி ருன்கு
வெம்மையின் மணிகொண்டெனக்குச் செவிமேவ
செம்மை சேர்கடுக்கன் செய்திட்டனை யெனிற் செவ்வே
இம்மை யேகவி செப்புவ னின்மிசை யென்ன.		(ருருரு)

மாயை நாளையான் புரிவனென்றுரைத் தனள் மறைந்தாள்
ஆய நாவலர் மறுதினத் தல்லிலம் மாயை
கோயின் மேயினர் கும்பிட்டு நிற்றலுங் குறையா
நேயமோடினி திட்டனள் காதுகணி ரம்ப.		(ருருசு)

விளங்கக் காதணி கொண்டெதிர் நின்றந்த விமலை
உளங் களிக்க நன்கவி சொலிவிடை பெற்றுறு ரூரவோர்
களங்க மற்றதம் மடத்துறக் காலையர்ச் சகர்கள்
வளங் கதித்த வச்சத்தி கோயி லினகம் வந்து.		(ருருஎ)

திறந்து பொற்கத வினையக நோக்கினர் செவ்வே
நிறந் தயங்கிய மாலையினித்தில நான்கு
குறைந் திருந்தன பயந்துபோய்க் கோன்வயிற் கூறி
அறந் திருந்திய வரசன் மற்றவ ரிலையுற்றுன்.		(ருருஅ

காவல் வாய்ப் புகக்கடுகின னிருக்க வக்கங்குல்
மேலொ யரசன் கனவினிற் கவி விரும்பும்
ஆவலாய்க் கழுத்தணி மணிமாலே யினன்கு
தாவ லாமணி கொண்டு தாசர்க்குக் காதணி நான். (௫௫௧)

இட்டுக் கேட்டனன் கவியர்ச் சகனா மிகவிம்சை
தொட்டுச் செய்திடே லெனத்திரி சூலிநேர் சொல்லி
விட்டுச் சென்றனள் விழித்துக்கோன் சற்ஜன வெற்பில்
நெட்டுக் கொண்டுறை நிமலர் பாலுடன் வந்து நேர்ந்து. (௫௫௨)

கண்டு தாசர்தங் கடுக்கனைக் களியுளங் கலந்து
கொண்டு நின்றெதிர் வணங்கினன் கூறினன் கனவை
அண்டு சற்சனர் தமக்கெலாம் வியந்தன ராக
மண்டு மன்பொடு விடைபெற்று மாநகர் வந்தான். (௫௫௩)

வேறு.

பின்பொரு வைகல் பெருந்தவ மெய்யர்பிழைப் பெய்தா
அன்ப ரொடண்ண விருக்க விராமன தவதாரத்
தின்பரி சோதினர் வெற்பிலி ருப்புழி யிவர்தாசன்
பொன்பயில் வாணிகனொரு சவுதாகிரி பொருநீர்மேல். (௫௫௪)

கப்பலின் வர்த்தக முற்றநெடுந்திசை காறேகிச்
செப்பமுடன் செய்து மீள்வுறுபோது தெறுங்காலால்
அப்ப தனிற்கல மூழ்குதலாகிய தப்போதில்
எப்படி யென்று மயங்கி வருந்தி யினைந் தானாய். (௫௫௫)

தன்னி லியற்று முயற்சியினுவது தானின்றி
மன்னிய தாசனா வந்தனைசெய்து மனத்தெண்ணிப்
பொன்னிறை கப்பலமுழ்ந்தவி லாதுபுக்கோடு
நன்ன ரளித்திடி னுன்கிலோர் பாகநல்குவெ னென்றான் (௫௫௬)

என்றவன் வேண்டலறிந்தனர் பேரருளேய் தாசர்
அன்றது போது கலத்துற லாயதை யாழாமல்
துன்றவரும் கனாசெய்தனர் கோடுது னித்தாசர்
நின்றன நீரநெடுந் துகிலோ டவனோர் கண்டான். (௫௫௭)

கனாயி விழிந்தவர் கான்மிசை வீழ்ந்து களித்தானாய்
வினாவினி னைந்துள வேளையெழுந் தெனையே காத்த
புனாயி னெடுங்குரு நாதவெனப் புகழ்போற் றற்றான்
உனாயின் மறைந்தன ரினிதுவியந்தன னுறுநவ்வான். (௫௫௮)

வேறு.

ஒருகணத்திலே யுடைநனைந் தொழுகுநீ ரோடு
பெருகுமன் பர்யாவரும் வியப்புறப் பிறங்கினராய்
மருவ நேர்கண்டு வாமனசாமி மாதவத்திற்
பொருவில் சாமி நுந்துகில் புரம்புனல் பொதிவ தெனே, (௫௫௯)

கணத்தின் முன்னிலே யிங்ஙன மெங்ஙனங் கலந்தீர்
உணர்த் துமின்னென வாணிகனொருவனன் குயர்ந்த
குணத்தினேன் சவுதாகிரி கப்பல் மூழ்குறுகால்
புணர்த்து வேண்டினன் புணரியிற் போய்ப்புறங் காத்தேன். (௫௬௦)

நரலை நீரிடை நனைந்தன னுடலுடை நானென்
றிரலை பின்றொடர் கின்றவன் றசரங்கி யம்ப
நிரலை நன்குள சாதுக்கணி மிடத்தி லிவர்போய்
வரலை யாரறிந்தே மெனவியந்தனர் மதித்தார். (ருகக)

மறுதினத்தந் தவர்த்தகன் வேண்டிய மாழை
தெறு புலத்தினர் பாற்கொடு வந்து சேவித்து
நறு நலத்துயர் சற்குருநாதரே நான்போற்
றுறுகலத்தினை நீர் புகாது ஞற்றினிருற்றீர். (ருஎ0)

கண்டுகொன் மிசைப்பணிந்தெழீஇ நோக்கினேன் காணேன்
விண்டு மேவினீருமக்கு நான் வேண்டு காணிக்கை
கொண்டு வந்தனன் கொண்மினென்றுன்றலை குனிந்தான்
மண்டு மன்பர் கண்டிவர் மகிமைக் கொருவரம்போ. (ருஎக)

எனவியந்தன ரிருப்புழி ராமதாசெதிர்ந்த
கனதனங்களை யுத்தம பாத்திரங்களிலே
மனநிரம்புறச் செலவுசெய் தின்னும் வர்த்தகனே
தனநிரம்புவை யெனவிடை தந்தனர் சார்ந்தான். (ருஎஉ)

வேறு

பின்புசில நாட்கழிய வவரங்க பாக்ஷாவின் பெருகுஞ்சேனை
பொன்பிரழு நெடுமுகட்டுச் சஜ்ஜன கடைனு மலையைப் பொருந்தத் தம்பால்
வன்புகொடு கவரவெண்ணிப் பலவுபாயங்கள் செய்தும் வாய்ப்புறுமல்
முன்புவெடி விடுகுண்டு வாயிரும்பை யெதிர்மலையின்முகட்டி லேற்றி. (ருஎங)

பலகோடியுருமினங்கள் பாய்ந்தவென வெடிகுண்டுப்படலை தூற்றி
அலர் பானுவருபுகையின் மறைய நெடு முழக்கங்க ளயரவத்தால்
நலனீடு மலையிடைப்பன் மனைகள் சிதைவுற்றனவந் நலிவைத்தாசர்
புலனுடி மாருதியை நினைக்கவுடன் வானரங்கள் புகுந்து நேர்ந்த. (ருஎச)

தசமுகன் போருறுகணை கடகர்த்த நெடுங்கரங்களிற் குண்டு களைத்தாக்கி
வசமிருந்து வருகுண்டு வாய்முழை யெல்லாந்தகர்த்து மாற்றித் தூற்றும்
விசைமிகுந்த கன்மழையால் வீராணியுடை பட்டு வெருண்டு மாய்ந்த
தசைசிதைந்து விழுசேனைத்தலைவனது தனையுணர்ந்து தரிக்கலாற்றான். ருஎரு

ஈசகங்களெரி கிரிக்குப் பிழைப்பரி தென்றுறத் தெரியக்கிளத்தலான
வாசகங்கள் வரைந்து தங்கள் மன்னவனுக்கனுபபியினும் வலிமைதேற
மாசங்கடொழு தேத்து மிந்துபகீரம்மலையில் வளருஞ்சீரும்
மூசகங்கள் வழிவுறவாய் முகக்கு நெடுங்குரங்குகள் செய்முழக்குந் தேர்த்தான்

தெரிந்து தெளிந்த வரங்க பாக்ஷாவச்செய்தி யெல்லாந்திருந்து சீர்த்தி
அருந்தவத்தினிந்துப கீர்தமை வணங்கித் திரும்புகென வறிக்கை செய்தான்
பொருந்திய சேனைத்தலைவன் ராமதாசடியில் வந்து புகழ்ந்து போற்றிப் [ஞன்
பெருந்தவத்திரெமைப் புரக்கவேண்டு மென விடைபெற்றூர் பெயர்ந்து போ

இதுதெரிந்து சிவாஜியண்ணலின் பினுக்கோர்கரை காணுதெழுந்து போந்து
மதுவிரிந்த துழாய் நெடுமாலடியாரது மகிமைதனை வியந்து வாழ்த்திக்
கதுவினின்றுன் பதம்வணங்கி ராமதாசவன் முகத்தைக் கனிந்து நோக்கிப்
பொதுவிகந்ததனி யிடத்திற் புகவழைத்துக்கொடு போந்து புகலுகின்றூர். ()

சிவாஜி நீ ஸ்ரீ ராமன்சரணாரவிந்தத்தைச் சேர்வதாக
அவாவியகாலஞ்சமீ பித்ததனால் விவகாரமனைத்து நீத்துத்
தவாது திடச்சித்தனாய் ராமரூபந்தன்னைத் தரித்து நெஞ்சில்
துவாதசத்தோடொன்று செறியக்ஷரத்தைப் புகன்றிருத்தி யென்று சொன்னார்.

பேசுமுனே பிரமானந்தங்கிளர்ந்து பெருகியண்ணல் பெரியோர் போற்றும்
தேசுசெறி சற்குருவை வணங்கியுடல் பொருளாவி தெத்தஞ்செய்தேன்
வீசுமருள் பெறுமுன்னே நுமதருளின்படி நடக்க மேவுகின்றேன்
மூசுபரதந்திரனாயெனப் பணிந்து விடைபெற்றார் முடுகிவந்து. (நூ௮0)

பலதான தருமங்கள் புரிந்து குருநாதனாற் பணித்த நாளில்
தலம் யாவுஞ் சம்பாஜி யெனுந்தனை யன்றனக்குதவி முடியுஞ் சார்த்திப்
பொலன் மேவுமே காந்தத்தலத்திலொரு புடையிருந்து பொன்மணாளன்
நலனாருந்திருமேனி தனைநினைந்து ராமனடி நண்ணி வாழ்ந்தான். (நூ௮க)

வேறு

அண்ணலான சம்பாஜி தனத்தனுக்
கெண்ணலரன வினைகளெல்லாஞ் செய்து
நண்ணலாயினன் சற்குரு நாதர்பால்
பண்ணலாயினன் பாதம் பணிதலே. (நூ௮உ)

தந்தை தன்னை நினைத்துத் தளர்ந்தனன்
அந்தவேலை நல்லாரியர் மற்றவன்
சிந்தை தேறத்தெருட்டி யுலகியல்
விந்தை கூறி மெய்ஞ்ஞானம் விளம்பினார். (நூ௮௩)

அருள் செறிந்த நல்லாரியராலுளம்
தெருள்வதான சம்பாஜி சிவாஜிபோல்
மருளொழிந்து தன்னூர் வயின் மன்னினான்
பொருளுணர்ந்துறை மாதவபுங்கவர். (நூ௮௪)

தம்மை நேர்வுறு தாசவர்க்கங்களை
அம்மை மேவவழைத் தவர் தேர்வுறச்
செம்மையே யுரைசெய்தனர் மகமாம்
கொம்மை தேய்மதி கூடு நவமியில். (நூ௮௫)

மத்தியானப் பகலில் வைகுந்தமாம்
முத்தியானுற முந்திய தாதலால்
சித்தியான பினண்ணர் தஞ்சேயின் சேய்
பத்தியான கங்காதரப் பண்பனே. (நூ௮௬)

கூவி யென்பத மேவக்குறிக் கொளீஇத்
தாவிலாவ பிஷேகந்தனைச் செய்தென்
வீவில் சாம்பிரதாயம் விளங்குற
நீவிர் செய்திரொனா நியமித்தனர். (நூ௮௭)

அந்தவப் பொழுதே யடியா ரொலாம்
முந்தவங்கு முயன்றுந் தமையனார்
சொந்த நன்மனைக் கேவினர் தூதரை
இந்தவாய்மை யெலாரு மறிந்தரோ. (நூ௮௮)

கூடினாருடன் சற்ஜன கோருற
நாடினார் குருநாதனைக் கண்டுதாள்
சூடினாரவை துன்னுறத் தாசர்தாம்
நீடினார் முகநோக்கி நிகழ்த்துவார். (ருஅக)

ஹரிதன்னாமம் விடா மலமைந்து நீர்
சொரிவ பிச்சை கொண்டுண்டு சுமந்து நீர்
சரிர முள்ளதனை யுஞ்ச குணமாம்
கரியகோல வுருவைக்கரு துவீர். (ருகய)

பூசை நீதி யியற்றிப் புரிகுவீர்
ஆசையாக விராம நவமியும்
தேசை மேவனு மந்த ஜெயந்தியும்
ஏசை யோவிய தாசரிங் கெய்துறில். (ருகக)

அன்பி னாதரித்தா ருயிர் மாட்டருள்
இன்புசெய்து விராக மிசைந் திரும்
துன்பமாய பற்றற்றச் சுதன்புகழ்
என்பயாவர் சொன்னாலும் வினாவியே. (ருகஉ)

நேசமேமிக நீருநிகழ்த்தியே
தாசபோத கிரந்தந்தனையுமே
மாசடா நியமத்தொடு வாசித்துத்
தேசதாகத் தினந்தினந் தேறுவீர். (ருகங)

சாதிநீதி தவறுதலின்றியே
நீதிராம நன்னாம நிகழ்த்தநா
மேதினிக் கணிவ்வாறு விராவிலு
பாதிநைந்தி ராமன்பதம் பற்றுவீர். (ருகச)

என்று கூறினர் யாவருங் கேட்டனர்
நன்று நன்றென நண்ணி வணங்கினர்
நின்றுநேர் பொழுதிற் கருணாடகம்
ஒன்று தேயத்திருந் தொருவுத்தமர். (ருகரு)

சீதைராம னிளையவன் வாதசேய்
ஆதலாகிய மூர்த்திகளைக் கொடு
போதலாயினர் கண்டு பொருந்தரும்
காதல் மேவினர் சுட்டுரைக் கின்றனர் (ருகசு)

இந்த மூர்த்திகளை யெழிற்பெட்டியில்
பந்தனஞ் செய்துவை மின்பயன் படும்
பிந்த வென்றுரை பேசினர் மாதவத்
தந்த நேர்கலியாண கோசாமிக்கே. (ருகஎ)

நாமஞ்சோதி நலங்கிளரும் பரந்
தாமமேவிய பின்புச மாதிசெய்
யாம லிவ்வுடலைத் தகனஞ் செய்து
வேமங்கே யொருகோயில் விளக்கியே (ருகஅ

நான்கு மூர்த்தியு நன்குநிலைப்புறத்
தீங்குறுது செய்கென்றருள் செய்தனர்
ஆங்கு நின்று வினவுமனை வரும்
பாங்கு மாகவ மரபக்கத்திலே.

ஆதியாந் திதிதொட்டுறு மட்டயித்
தீதிலாத் திதிகாறுஞ் சிறப்புற
வேதியர்க்குப் பகலின்மிதவையும்
சோதி ராவி லரிகதை சொல்லலும். (௬௱)

நேர வுற்சவஞ் செய்து நிரப்பு நாள்
சாரலான சம்பாஜியுந் தாழ்ந்துற
ஆரமேவுஞ் சகாப்த மொராயிரம்
சேரிரண்டு முந்நூறு செல்லாண்டிலே. (௬௱௧)

வற்சரந்துன் மதிமாக வத்தியத்
திற்சிறந்த நவமிதி தியிலே
சற்சனக் குருநாத சமர்த்தர் தாம்
விற்செறிந்து விடிபொழு தெய்தவே. (௬௱௨)

நீரின்மூழ்கி நிகழ்பது ம . ஜனம்
சார்வதாகித் தயரத ராகவன்
காரின்மேனி கருத்துறக்கண்டு கொண்
டார்வமேவி நடுப்பகலாகவே (௬௱௩)

வீமனே மிதிலாபுரிக் கோன்மகள்
காமனேகருணாநிதியேமுக.
சோமனே மிளிர் சோதித்திருவுரு
ராமனே யிங்கு நண்ணியென் கண்முனே. (௬௱௪)

நின்று சேவை நிரப்பி நெடிது நீ
நன்று நின்னடி நண்ணப் புரிதியென்
றென்று போற்பல வோதினர் மெய்த்துதி
அன்று கண்முனடுத்தனன் ராமனே. (௬௱௫)

கண்டுராமனைக் கண்களி கூர்ந்தனர்
தொண்டு நேர்குரு நாதசுவாமி தான்
அண்டு சீரடியாமலரைச்சிரம்
கொண்டு நேர்வடி வச்சகுணத்திலே. (௬௱௬)

ஜயஜயரகு வீரசரணென
இயல்வதாயின ரெண்டிசைப் பாலரும்
மயலிலாத பல்வான வருந்துதி
முயல மேவுமுனிவரு முந்திஞர். (௬௱௭)

மலரின் மாமழை பெய்தனர் வாழ்த்திஞர்
அலறவாத்தியம் யாவு மற்றவ்வயின்
நிலவநின்ற நன்னேயருடலினைப்
பருந்தாங்கியோர் பாங்கு வைத்தாரரோ. (௬௱௮)

வேறு

*அங்குள்ள தாசர் பலருங்குலாவிய ரிதாசரானவிவரை*
*நங்கண் கள்கண்டு மகிழ்கூர்வதென்று நணுகுஞ்சிவாஜி யரசன்*
*பொங்கும் புகழ்க்கொள்குரு முன்பு வீடு புகலாயினனிவிடரில்*
*தங்கும் படிக்கு நமைநேர் வதாயதிது வோசலிக்கும் விதியே.* (௯௱௯)

*நாமுள்ள காலமளவும் பொறுக்க நணுகிற்று மிக்கநலிவென்*
*றேமன்னுவாய் கொடினை விற்புலம்பி யிருகண்கணீர் பெருகினார்*
*மாமல் குதேசு குருநாதசாமி மகிமைக் குணங்களுளவெல்*
*லாமன்னி யோதியுறு வார்களாகி யளவற்றடைந்த வரெலாம்.* (௯௱௰)

*வாசஞ்செய் சந்த மகிலிந்தனங்கள் வகையேபரப் பியதன்மேல்*
*நேசஞ் செறிந்த குருசாமியாக நிலவக்கிடத்தி முறையே*
*தேசங்கி மேவவியல் வித்தபின்பு தின மூன்றதாகவுதயத்*
*தாசங்கை யின்றி யருண்மேவு தாசரங்கத்தை நன்குசெயவே.* (௯௱௰௧)

*அடலைத் திரட்சியதை யள்ளுபோதிலதிலோர் திரண்டகுமிழின்*
*சுடரைப் புனைந்து மிளிர்பாது கந்துனுறல் கண்டுசோதி மய்மாய்த்*
*தொடரக் கரங்கள் பதின்மூன்றதான திருமந்திரந்துனுறவே*
*படரப் புனைந்து வரைவுற்றிருந்த படியுந் தெரிந்தனரரோ.* (௯௱௰௨)

*மிகவும் வியந்து பலவாறினைந்து மிளிர்கின்ற பாதகுறடு*
*தகவங்கை கொண்டு கலியாணசாமி தளர்கின்ற துன்புதவிரத்*
*தொகமண்டு பூதியிடை நின்றெழுந்த தொனியொன்ற தென்னை யெனிலோ*
*அகமின்பு மேவமொழிகின்ற வென்சொலதுகேளு மென்றருளினால்.* (௯௱௰௩)

*என்னுகமட்டு மிலையாயதி யானிவுலகுள்ளகாறு மியல்வேன்*
*தன்னுவிடர்ப் படுவதென்னை நீவிர் தனிராம நாமமது தான்*
*நன்னுவிளங்க நனியன்புமேவி நவிருச போதமதனைப்*
*பன்னுளு மோதிலுயர் வற்றுயர்ந்த பதமேவுகிற் பிரெணவே.* (௯௱௰௪

*கவியொன்றுரைக்க வரைவுற்றுணர்ந்து கலியாணசாமி முதலாய்க்*
*குவிகின்றவன்பர் மிகவும் வியந்து கொண்டாடினாரவளவில்*
*தவிலின் படைந்த குருசாமி பேரர் கங்காதரப் பெயரினார்*
*நவில் கின்ற ஜாம்பு நகர் நின்று கன்ன நதியின்கண் வந்துநணுக.* (௯௱௰௫)

*கலியாணசாமி முதலான காவலரசுங்கலந்து கடுகி*
*ஒலிமேவு கன்ன நதியின் கண்வந்து தழுவுற்று வந்து சிவிகை*
*யிலியாருமன்பு கொடுவாழ்த்தி யேற்றியியம் விம்மவந்து மலைமேல்*
*பொலிவான தாசருறு மாசனத்தினெதிர் முன்பு குத்தினரரோ.* (௯௱௰௬)

*கங்காதரப் பெயரினார் புகுந்து கமலப்பொனன் பனடியார்*
*தங்காசனத்தை யிருகண்கள் கண்டு சாஷ்டாங்கமான பணிவு*
*பொங்காத ரத்தினுடனே புரிந்து புரமங்கி கொண்ட புறனோர்*
*சிங்கா நிகேதனஞ்செய்து பாதகுறடங்குதேசு பெறவே.* (௯௱௰௭)

*சீதாமணாளனிலையான் வளிக்கொர் சிறுவன்றிகழ்ந்துவளர*
*மாதாபனஞ்செய்துபசார மீரெண்வகையும் புரிந்து தினமும்*
*வேதாதி காரருணவாதி செய்து பகல்போன பின்பு விதியே*
*தாதா தமப்பனினிதான கீர்த்திதனையோதி யைந்துதினமாய்.* (௯௱௰௮

ஒளிருற் சவஞ்செய்தனேவோரு மன்பரொரு பேரர் தம்மையவர்தம்
வளர் வுற்றதான மதிலேயிருத்திய பிஷேகமன்ன நிறுவிக்
கிளரப்புரிந்து மகிழ்சாறமைந்து கெழுமுற்ற கங்கதாரை
மிளிரப்பணிந்து மகிழ்வாயினோர்கள் விமலத்தின் மன்னியவரும். (சுாமஐ)

ஞானம் விராக மிகுமன்பு காளு நனிமேவி நன்கினவராய்
ஊனங்கடிந்து வரலாயினோர் பின்னெருராம நவமிபுறவே
தானங்கமைந்த பத்துத்தினஞ் செய்தனியுற்சவஞ் செய்தினிதாய்
மானஞ்செறிந்த வளிமாமகன்றன் வளருற்சவந் தொடரவே. (சுாஉ0)

பதினென்றதான நிலையுங்கலந்து பணிபுற்சவஞ் செய்தழகாய்
அதிநன்றிமேவி மடமொன்ற வப்பரமை பூசியியவாசன்
முதிரன்பு கொண்ட ரகுநாததாசர் திதிமேவ முற்று முறையே
மதியொன்று தாசரனைவோரு மேவ மகிழ்கொண்டு ஏற்றினரரோ. (சுாஉக)

சமர்த்த ராமதாச சுவாமிகள் திருவடிகளே சரணம்.

ஆக சரித்திரம் முற்றுச் செய்யுள் எழுநூற்றுக

---

முற்றிற்று.





# மண்டலீகராஜன் சரித்திரம்.

இந்துஸ்தான மெனப்புக றேசத்தில்
முந்துபேர்மண்ட லீகனெனமொழி
தந்துபோற்றவோர் வேந்துதழைத்தனர்
மைந்துசேருஞ் சுலக்ஷணி மாதுடன். (௧)

மண்டலீகர் வதுவை மனைவியார்
விண்டுபக்தியின் மேவிவருமவர்க்
குண்டிநல்கி யேகாதசி யென்றுனை
கொண்டநாளுப வாசங்குறித்துளார். (௨)

இடையறுசரி கீர்த்தனத்தின்புறு
நடையராயுறு வாரவர் நாயகர்
அடையவேதுமி லாதரிநாமமுள்
ளுடையராயுறு வார்செயலோர்கிலார். (௩)

கொண்டகேள்வனை நோக்கிக்குறித்துநீர்
விண்டுபூசனை செய்திடவேண்டுமென்
றண்டியன்பொ டுரைக்கவரசனார்
ஒண்டொடிப்பன்னி யார்க்கிதுரைசெய்வார். (௪)

புலனெலாந்திரி புந்தியுடையன்யான்
நலனுலாவுபத் திக்குநல் லேனல்லேன்
குலனுலாவுமின் னேயெனக்கோதிலா
மலர்மின்னாரனை யாருளமாழ்கினார். (௫)

இன்னவாறுற வோர்தினமேந்தலார்
முன்னுநித்திரைப் போதுறு மூரிதாம்
மன்னலாஃபி ராமவென வாய்சொல
நன்னரோர்ந்தனர் நாயகியாரரோ. (௬)

மிகுகளிப்புடன் மேவியுதயத்தில்
வெகுசிறப்பொடு விண்டுவைப்பூசித்துத்
தொகுபிராமண போஜனஞ் சூழ்ந்துமால்
நகுவிழாவு நடத்தத் தொடங்கினார். (௭)

தானஞ்செய்துற்ச வஞ்செய் தலையவர்
கோனறிந்திது செய்வதென் கூறென
ஞானராமநன் னாமநும் வாய்வரல்
ஆனதின்று துயிலிடை யன்பரோ (௮)

என்றுநும்முடை வாய்வழி யெய்திடா
தின்றிராமநன் னாமமெழுந்ததால்
நன்றுநான்மகிழ் கொண்டுந டத்தினேன்
மன்றலார்துள வோனுற்ச வமென்றார். (௯)

என்னக்கேட்டவ் விராமனென் வாய்வழி
மின்னலாய்வெளி யுற்றனனேகெனு
தன்னதாவி யவனொடுசோர்தர
முன்னிவிட்டனர் மூதுணர்வேந்தரே. (௰)

கண்டியாவருங் காவலனுண்ணிலை
கொண்டுளோனெனக் கூறிவியந்தனர்
பெண்டிராய வரும்பதி பின்னரே
அண்டிவிட்டன ராவியை யன்றரோ. (௰௧)

மண்டலீகராஜன் திருவடிகளே சரணம.

ஆக சரித்திரம் ௫௧-க்குச்செய்யுள் ௪௬௫௰௨.

முற்றிற்று.

# பிளாபாயிசரித்திரம்

ஒருபிரதானிபுத் திரியென்றேதுற
வருபிளாபாயி யென்பவர் வளர்ச்சியிற்
பெருகுமுன்பா லியந்தொடங்கிப் பெட்புசால்
திருமக ணயகன் பூசை செய்குவார். (௧)

அன்புமிக் குறவரு மளவிலன்னவர்க்
கின்புசெய் நாயக னிறந்து போயினன்
பின்பவர் தந்தைபா லடைந்து பேதுறூர்
முன்புபோ னடத்தினர் முகுந்தன் பூசையே. (௨)

ஆயிடைக் காலஞ்சென் றவர்தந் தந்தையும்
போயின னிறந்துபின் பொருந்து தம்பிமார்
ஏயிருவருந்தமி லிசைவுறுதுளம்
மாயிரும் பொருள்களைப் பிரிவு வாய்த்தவர். (௩)

இருவரு மிரண்டு கோட்டைகளை யின்பொடு
பிரிவு செய்து றப்பிளா பாயிமுன்னவன்
அருகு றப்பின் னவனளவளாய்ச் சில
வருதினி கொடுதமை யனைவருத்தியே. (௪)

உளபொருள் யாவையுங் கொள்ளை போயுற
அளவில் போர்செய் தவமாக்கு போதவெண்
வளர்பிளா பாயி பூசனைக்கு வாய்ந்தவா
துளவமால் பேழையுங் கொள்ளைதுன்னிற்றே. (௫

சக்கிரிபூசை செய்யாமற் சாப்பிடார்
தக்கபூசைப் பெட்டிதா னில்லாமையால்
நெக்கன ருளம் பரிஇ நேர்ந்த பின்னவன்
பக்கலா ளுய்த்தனர் பேழைபற்றியே. (ரு)

அன்னவன்றேடி' நோக்கினன் மற்றஃ தெங்கே
துன்னியதோ வெனச் சொல்லி விட்டனன்
மன்னிய வைந்துநாள் வரையும் பூசியா
இன்னலி னீருமுண்ணு திருந்தனர். (எ)

அனையர் தந்திட நிலையறிந்து ஸ்ரீதரன்
நினைவுறு கனவினி னோர்ந்தொர் வேதியன்
புனைவுருக் கொண்டவர் பூசைப் பெட்டியை
இனைவறத் தந்தனன் விழுந்தெழுந்தனர். (அ)

பார்த்தனர் பெட்டியைப் பரிவு நீர்ந்துடன்
தீர்த்த மாடினர் தினஞ் செய்யும் பூசையைச்
சீர்த்த மாறனக் கினிதாகச் செய்துபின்
பேர்த்த முதருந் தினர்பிழைப் பின்ருகவே. (கூ)

இப்பரி சறிந்தன னிளைய தம்பியும்
தப்ப றவுருளோர் சாற்றத் தன்னுளே
கைப்புட னுத பித்திந் தக்கையற
வெப்படிக் கியற்றினெ னென விளைந்தனன். (ய)

வந்து தன்றமை யனைவணங்கியான் செய்த
நிந்தனைப் பிழையினை நீபொறுக்கென
மைந்துற வேண்டின னுறவு மன்னியே
சிந்தையொன்ருய்த் தமக்கையிடஞ் சேர்ந்தனன். (யக)

நான்புரிபிழை பொறுத்தருள்க நன்றெனுத்
தான்பணிந்த வரனுக் கிரகந் தங்கமுன்
னேன்படி பெற்றன னுகந்து நித்தியம்
வான்பணி செய்திருவரு மகிழ்ந்தனர். (யஉ)

பிளாபாயி திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ருஉ-க்கு செய்யுள் சதுருாஅமச

---

முற்றிற்று



# ராமாபாயிசரித்திரம்.

வேறு.

காசியிற் சந்தராஜ னென்றோர் காவலன் சாதுக்கள்
பூசைசெய்வதின் மிக்கன்பு பூண்டுளோ னவனுக்கோர் பெண்
தேசுறு மிரமாபாயி மணம்புரி செவ்வி சேர
எசிலா மணஞ்செய் வித்தாரொருவனுக்கியல் வதாக. (க)

மணமக னிவந்தோன் மாலரி பக்தி யின்ன
வணமென வறியான் செங்கண்மால் பெயர்நாவில் வையான்
புணர் விஷயங்களிற் செல்புந் தியனைக் கண்டு
குணநலத்திர மாபாயி யாரனார் கொள்வதானார். (உ)

முன்வினை யின்னவாறு முடிந்த தென்றனுத பித்து
மன்வெகு நாட்செல் காலை ரமாபாயி வயிற்றோர் மைந்தன்
துன்றுசத் குணனாய் வந்து தோன்றி னன்றோன்ற வின்றோர்
பொன்மகிழ் காந்தன்றன்னைத் தியானித்தெப்போது முற்றோர். (௩)

அருடரு கமலச் செங்கணயனே யெனக்கு வாய்த்த
தெருளிலாவ பக்தனுக்குன் சீர்தனைத் தெரியக் காட்டி
மருளறச் செய்து நின்சீர் மலரடிக் கன்பனாக
வருநலஞ் செய்வதென்றே வெனப் பிரார்த்தித்து வந்தார். (௪)

ஒருதினங் கணவன்றன்னை நோக்கியுத் தமர்க ளாக
வருவயிணவர் சாதுக் கடமை மனத்த லகூதியாமல்
கருதுயிர் வதைசெய்யாமலி ருத்தனற் கருமமாகும்
மருவவை செய்தான் மீளாநரகமே வாய்க்கு மென்றோர். (௫)

மனைவி யாரவ்வாறே தமற்றவ னுணர்ந்து கொள்ளா
நினைவுட னரிதினத்தோ ராட்டினை நேடிக் கொண்டு
வினைகொலை புரியவீட்டின் மேவின னதனைநோக்கி
இனைய தின்றயர் தனன்றன் றென ரமாபாயி சொன்னார். (௬)

சொன்னதுட் கொள்ளா தூனின் சுவைதனக் கின்பு கூர்ந்து
நன்னர் சேர்தயை யில்லானாய் நனிது ராசாரன் கொன்றான்
பன்னியா ரதனைக்கண்டு பரிந்திதற் கென்னை செய்வோம்
என்ன மிக்க ஞருண்டாகி யெண்ணினரினை யசெய்வார். (௭)

இந்தவூர்தனின் மாலன்ப ரொய்திய திலேயோ வென்னச்
சிந்தை ஜெய்தங்கோர் கோயிற் செறிந்திருந்தது தெரிந்து
நந்தல் செய்விடத்தைக் கொண்டு நந்தனுக் கூட்டித் தொட்டில்
முந்துறத் தூங்கவைத்தாருடன் மகன்முடிந்து போனான். (௮)

மகனிறந்த தனையத்துன் மார்க்க ஞதியர் தெரிந்து
முகமிகவாடிக் கோவென்றல றினாழுது முந்தத்
தகவுறு தாயேயான ரமாபாயி தளர்வுறுமல்
ஜகபதி நாமநாவிற் செப்பியங்கிருந் தாராக. (௯)

கண்டவ ரவனைநோக்கி யுன்மனங் கலங்குறுமல்
அண்டின விதனை நோக்கிலாச் சரியந்தா னென்று
மண்டின ரழுதுசொல்ல மற்றவ ரழிவதான
பண்ட மென்றேனு மாயும் பரிந்தழிற் பயனென்னுகும். (௰)

ஏனவவர் கணவனுனேனிச் சிறுவயதிற் சாதல்
உனின் முறையாமோ வென்னவதற் கவருண்மை யானுல்
பனகமெல்லணை சேர்கின்ற பரனருள் வானதற்கு
மனநல ரானசீர் சான்மாலரி தாசரானேர். (௰௧)

நம்மனைக் கெய்துவாரோ னண்ணு மித்துயரந் தீரும்
செம்மலே யென்ன வெவ்வாறெ னவவன் வினவச் சீர்சா
லும்மன நல்லோனைக் கூய்வந்தவர்க் குபசாரங்கள்
விம்முறப் புரிந்தன்னேர் தம்பாதத்தின் விமலதீர்த்தம். (௰௨)

மைந்தன் வாய்ப் பெய்தானந்த மகன்பிழைப்பா னென்றேக
முந்தவன் வியந்து சென்று முகுந்தன் வாழ்கோயிற் சார்ந்த
நந்தலி லடியார் தம்மையழைத்தக நண்ணச் செய்து
வந்தவர் தமைப்பூசித்து வந்தித்துப் பாததீர்த்தம். (௰௩)

சேயதுவாயிற் பெய்யவுட னந்தச்சிறுவன் றூக்கம்
மேயவன்போ லெழுந்து விளங்குற வியந்து கண்டு
போயதெம் பொரும லென்றுன் பயந்தந்தப் புனிதர் தம்பால்
ஆயது பக்தி யன்றுற்க கன்றது தீயசெய்கை. (௰௪)

அதுமுத லவனல்லோ ஞயனுதினம் பஜனைசெய்து
மதுவிரி துளவோன் பூசைசெய்வதில் வழுவுறுமல்
முதுநலச் சாதுசேவை முன்னின னரிதன் காதை
கதுவுற வினவி மாறன் றுசனுய்க் கலந்து வாழ்ந்தான். (௰௫)

ராமாபாயி திருவடிகளே சரணம்

ஷுகச்சரித்திரம் ௫௬-க்கு செய்யுள் ௨௲௫௱௯௰௯

முற்றிற்று



# ராமராஜர் சரித்திரம்.

பரமசாத் துவிகார யிராமவுபா சகருமாய்ப் பகலுமல்லும்
தரமிகுசீ ராமசரித் திரங்கேட்டுஞ் சதுரராம் ராமராஜர்
அரண்மனையிலே ராமாயணம் படிப்போ ரிராமருக்கோ ரனுர்னேர்வான
திரம்வினவி லரசனிடர்ப் படலறிந்தி ராமஜெயஞ் செப்புகிற்பார். (க)

ராமவிஜயஙகேட்டுச் சந்தோஷித் துவருவார் நண்ணுநாளில்
ஆமதனைத் தினம்படிக்கும் புராணிகரோர் நாளையா யரசர்தம்பால்
சாமருளும் புதல்வனைப்போய் ராமஜயந் தனைமட்டுஞ் சாற்றுகென்று
நேமகஞ்செய் தனுப்புவிக்க மகன்றுதை சொன்னதனை நினைப்புறாமல். (உ)

பஞ்சவடி தனிலிளைய பெருமானுஞ் சானகியும் பணிநிருண்ட
மஞ்சனநன் னிறத்தானும் வதியுங்கான்மா ரீசன்மா னென்றாகிக்
கஞ்சமலர்த் திருமுன் வாக்கண்டு வியந்திது தன்னைக் கவர்ந்து நல்கென்
றஞ்சனவண் ணனுக்குரைக்க வவன்றொடர்ந்து சென்றம்மா னகப்படாதால்.()

மாயமிம் மானென மதித்துவா யம்புதொடுத்திட மற்றதுதான்பட்டு
காயம் விழும்போதி லக்குமணாவென்று கதறிவிழக் காதிற்கேட்டு
நேயமிகு ஜானகியுன் றமையனுக்கே தோவவல நேர்ந்ததானீ
போயங்கே கண்டுவரு கெனவிளையோன் மறுத்துமவள் புகல்கேளாதால். (ச)

கூய்விழுந்தா னொலிவழியே தேடியகன் றனந்தக் கொடியமானை
எயவன்ஜா னகிபால்வந் தினிமை சொல்ல விசையாட னியல்பு தேர்ந்து
பாயபன்ன சாலையொடு மண்ணகழ்ந்து தேரோற்றிப் படர்ந்தா னென்னும்
ஆயசமயம்படிக்க வரசர்கேட்டு ளங்கொதித்தா ரவசமாகி. (ரு)

படர்கின்றான் றனைத்தொடர்ந்து பற்றுதற்குச் சதுரங்க படையுங்கூட்டித்
தொடர்கென்று மந்திரிக்குச் சொல்லவவ னவ்வாறே தொடர்தலாக
அடர்கின்ற சேனையுட னரசருந்தென் கடலளவு மடைந்துமுந்நீர்க்
கடலொன்றித் தனிச்செல்லு மரசர்மன நிலைதெரிந்து காகுத்தன்றான். (சு)

ஜனகியுட னெதிர்வந்து தராபதியை நோக்கியிவட் களவுசெய்த
மனதில்வஞ்ச கனைக்கொன்று மீட்டுவந்தேன் போகற்கமன்றுவென்னச்
சினமிகந்து வேந்தர்திரு நாதனுடன் மீண்டுகளை சேர்ந்து நாதன்
றனதுபதங் களைவணங்கி னனிபுகழ்ந்து விடைபெற்றுச் சார்ந்தார் தம்மூர். (எ)

சார்ந்துமுன்போ லிராமசரித் திரங்கேட்டு வேந்தர்நகர் தங்குநாளில்
ஆர்ந்தநல்லன் புடனரியைத் தியானித்துப் பஜனைசெய்வா ரவர்நாமஞ்சேர்
சேர்ந்தநர ஹரிதாசர் தியானிக்கும் போதெல்லாந் திருமால்வந்து
நேர்ந்துதரி சனங்கொடுக்கு நிலைபெற்றோர் நெடுமோற னவதாரங்கள். (அ)

ஒவ்வொன்றுந் தாம்வேட முறிற்சிட ரதற்கேற்க வுருவங்கொள்ளும்
செவ்வியராய்த் துணைசேரப் பல்லியங்கண் முழங்கநடஞ் செய்வாரோர்நாள்
வெவ்வியதோர் நரசிங்க வேடங்கொண் டாரவர்பான் மேவோர் சீடன்
வவ்விநின்று னிரணியனாய் மற்றொருத்தன் மகனாக வாய்த்தபோது. (௯)

மகனொ டிரணியன்வாது செயவிட்டுத் தூணுள்ளே வதிந்தார் தாசர்
மிகமுனிந்தெங் கணுமிருப்பா னென்னஹரி யித்தூணுண் மேவுவானோ
தகவுடனென் றிரணியனா னென்வினவி யெதிர்தூணைத் தாக்கவத்தூண்
அகமிருந்து வந்துகன கன்வயிற்றைக் கீண்டுகுட லனைத்தும் வாரி. (௰)

கழுத்திற்கு மாலையிட மெய்யேமாண்டான் கனகனானந்த
முழுத்தத்தை யனைவருங்கண்டோவென்று கூயலற முடிந்தோற் குற்றோர்
கிழித்தத்தை யரசிடஞ்சென் றுரைப்பமற்றக் கேளிர்முக நோக்கிவேந்தர்
கழித்தந்தச் சவந்தன்னைப் பின்புநீர் வருகென்று கழறக்கேட்டோர். (௰௧)

அவ்வாறு சவந்தன்னை மயானத்திற் கொண்டுபோ யனலுக்கீந்தார்
வெவ்வாறு தனைவிலக்க நரஹரிதாசரைத்கூவி வேடங்கொள்வீர்
செவ்வாறு தனைநடத்துந் தசரதராய் நுஞ்சீடர் சேர்கவேடம்
தவ்வாறு நடவாத ராமனுங்கை கேசியுமாய்ச் சார்கிரொன்றார். (௰௨)

அப்படியே வேடங்கொண் டவர்கூத்துச் செயும்போதி லடவிராமற்
கொப்பின்முடி சூட்டுங்காற் கைகேசி தடுத்துவனத் தூடுசெல்லச்
செப்பியிரா மனையனுப்ப வரத்தாலே யதுதெரிந்து தசரதர்தாம்
இப்படியா யிற்றேவென் றிராமபிரான் றனக்கிரங்கி யினைந்து நைந்து. (௰௩)

மகனேரா மாவுன்னைக் கான்விடுத்திங் குயிர்வாழ மாட்டேனென்று
முகமனுங்கி மூர்ச்சித்தா வியைவிடுத்தார் நரஹரிப்பேர் முந்துதாசர்
தகவுடனக்கூத்தாடல் கண்டிருந்த பேரெல்லாஞ் சார்ந்து தாசர்
மிகவருந்தி யிறந்ததுமெய் யேயென்று சோதித்து விம்மலுற்றார். (௰௪)

மாடங்கொ ளயோத்திபதி ராமனுக்கா யிறந்ததனை வழுத்தக்கேட்டோம்
வேடங்கொண் டிராமனிடை மனம்லயித்துச் சாயுச்சியத்தை மேவும்
பீடிங்குக்கண்டோமெய் யேயென்றங் கவர்பெருமை பேசலானார்
நீடன்பு கொடுராம ராஜருமா னுமங்க ணிகழ்த்தி வாழ்ந்தார். (௰௫)

ராமராஜர் திருவடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் ௫௪-க்குச்செய்யுள் ௪௲௯௱௰௪

முற்றிற்று



# ஓகரு சாவ்கார் சரித்திரம்.

———:○:(ı):○:———

தீங்குறாத நன்ஞான மும்பிரேமை யுஞ்சிறக்க
ஓங்குசத் குணத்துத்தம ரோகருவென்போர்
நீங்குறாதரிபஜனை செய்நேயர் நல்வணிகர்
தாங்குலாவுறுமனைவி யார்கற்பி னிற்றழைத்தோர். (க)

அந்தவம்மனை யார்வரு சாதுசஜ்ஜனரை
முந்துபூசனை செய்குனர் மோகமா மமதை
சிந்தைவிட்டுயி ரனைத்திலு மிகுதயை சிறந்தோர்
இந்தமற்றிரு வரும்ஹரி நினைவினரொன்றும். (உ)

ஏழையாங் குடிகளை மிகக்காவல் செய்தென்றும்
தாழ்வுறாதுற தினந்தொறும் பத்துப்பேர் தமக்கு
வாழ நல்லன்ன மிட்டுவெந் தீவினை வாரா
ஈழமீட்டுந ராயிரு வருமினி திருந்தார். (ங)

இன்னவாறிவ ருறுபொழு தொருதினத் தெம்மான்
அன்னராமவர் தமைப்பரி சோதிக்க வமர்ந்து
நன்னராகிய சாதுரூபங்கொடு நண்ணி
மன்னுமோகரு வெங்கென்றா னவர்மனையாளை. (ச)

சந்தைக்கெய்தினர் வருவரிங் கிருமெனத் தாழ்ந்து
முந்துற்றாசனந் தந்தனரதுவினுய் முகுந்தன்
நொந்துற்றேன்பசி யாலிடு வீரென நும்மை
எந்தத்தேசத்து மியம்பிய தாலிவணென்றான். (ரு)

என்றுபோஜன மிடுகென வாசனத்திருந்தான்
அன்றுதம்மனை யகத்தரிசியி னொடுபருப்பும்
ஒன்றுமின்மையா லோர்ந்து தநத்தினைக் கொண்டு
சென்று நீள்கடை தன்னில் விற்றது கொண்டு சேர. (சு)

வேண்டுறும் பொருள் கொண்டு தம்மனை யகமேவி
ஈண்டு போனகஞ் செய்துவந்தோற் கன்னமிடலும்
ஆண்டிருந் தன்ன முண்பவனுன் வெகுநாளாய்த்
தூண்டு வெம்பசி யாற்றொலை வுற்றனன்று வண்டேன். (எ)

அன்னை நீயிடும் போனகத்தாற் பசியனைத்தும்
நன்னர் நீங்கின வெனச்சொலி நனிவயிறார
முன்ன ருண்டனன் கால்கரஞ் சுத்தி முற்றியற்றிப்
பின்ன ரம்மனைக் குட்புகுந் தடுக்கெல்லாம் பிறங்க. (அ)

தன்றிருக் கரத்தாற் றொட்டென் பசிதெறுதாயே
இன்று தொட்டுன தடுக்கலில் வேண்டுவ வெல்லாம்
சென்று தொட்டனையே யுறுமென்றுரை செப்பி
நன்றிருத்தி நல்லோர்க்க முதிட்டென நடந்தான். (கூ)

மறுதினத் திற்றம் பதிவரக் கண்டிவண் வந்தார்
தெறு பசிக்குண வீகென வொருபர தேசி
பெறுமடைக் கென்றனத்தை விற்றுப்பெறல் பெற்றே
அறுசுவைச் சொன்றியிட்டனெ னருந்திய பின்னர். (ம)

சாது நம்மனை புகுந்தடுக்கனைத்தையுந் தன்கை
மீதுறத் தொட்டெப்போது நீவேண்டுவ பொருள்கள்
கோதுரு துறுமடுக்கின் மற்றப் பொருள் கொண்டு
போது சர்ச்சனர்க் கனமிடு கென்றனர் போனார். (மக)

என்ன வோகரு வியந்தன ரிருக்கமே லோர்நாள்
மன்னி னூரகஞ் சாதுசர்ச்சனர் பலர்வரலும்
அன்ன மீவதற்கேது மில்லா மறன்ன கத்துட்
டுன்னுசாது சொன்னதை யறிவோ மெனத் துணிந்து. (மஉ)

அடுக்கிற்கை யிடவிரா கன்மொக ராசில வனுக
எடுத்துக் கொண்டுவந் ததுகொடங் கெய்தினர்க் கெல்லாம்
கொடுத்துப் போனக முண்டவர் போனபின் குறித்துத்
தடுப்பி நம்மனை வியர்முக னேக்கினர் தாமே. (மங)

நானிலாதபோ தெய்தினர் சாதெனை நாடேல்
ஞானநாயக னேயுன்மு னணுகின னங்காய்
ஊனமின்றியுன் முன்வந்த வுத்தம னென்முன்
ஏனடைந்தில னெனப்பரி தபித்தன ரிரங்கி (மச)

பத்தபாலனு கோவிந்த வுயர்பரந் தாமா
மெய்த்த சீர்க்கரு ணாநிதியேயென வேண்டி
மைத்த சோதியுன் றனைத்தரி சிக்குமா நயனம்
மெத்தவும் பசித்துள தெனத் தோத்திரம் விளைத்தார். (மரு)

அந்தவோ கருவன்பின்மிக் குடைமையை யறிந்து
நந்தகோன் மகன்சங்கு சக்கரத்தொடு நாற்றோள்
விந்தைசேர் பொலனம் பரமேவு கிரீடம்
முந்துநூ புராதிகள் விளங்குற முன்னர்வந்தான். (மசு)

மயிலெருத் துறழ்மேனியன் முன்வரக்கண்டு
செயிரறுத்தவர் மாயவன் றிருவடி தாழ்ந்து
நயமுறுத்து சோடச வுபசாரமு நல்கி
மயர்வறப் பலதோத்திரம் வகுத்தனர் மாதோ. (மஎ)

மற்றவர்க் கபயந்தந்து மாயவன்மறைந்தான்
சொற்ற வோகரு தம்மனை துன்னுவோர்க் கெல்லாம்
நற்று போனக நல்கினன் ஞானநாயகனை
உற்ற தம்மனை வியரொடு பஜனை செய்துற்றார். (மஅ)

ஓகரு சாவ்கார் திருடிகளே சரணம்

ஆகச்சரித்திரம் நுரு-க்கு செய்யுள் சதுசுளாகூமஉ

முற்றிற்று

# ஹரி அனந்த வைஷ்ணவர் சரித்திரம்

ஹரியனந்த வயிணவரெனும் பெயர ரருளின் விஞ்சும்யதி பதிமுனே
புரிய நின்றநிய தியினி ணங்கிவரு புனிதரன் பின் மிகுபந்தியிற்
பெரியர் விண்டு நினே வினர்நிலம்படி பிராணிதோறு மருள்பெருகிமாற்
குரிய பூசையிடை விடுதலின்றி யியலுறுவ ரெங்குளவு முணருவோர். (க)

ததியர் பூசை புரிதலின் முயன்றுறுவர் ஜனரநேகர் கடமக்கிதம்
ஒதிய நின்ற பிரபத்தி நிஷ்டையருள் வலியராய்ப் பலரும் வரல்செய்தார்
அதிலொருத்தனவருக்கு மிக்க பிரியத்த சேவைபுரி பவனவூர்ப்
பதிகளொன்றியிடு பிச்சைமாவொரு படிப்பெறீ இத்தினமும் வந்தரோ (உ)

சற்குருத்தனது சன்னிதானமுற வைக்கமற்றவர் தயாமிகும்
பொற்கணிற்பெருகு பார்வையிற் பெருகிமா வெயர்க்கு நிறைபோனகம்
ஒற்கமற்றுதவ நாளநேக நெடிதுற்ற தாகியுற வோர்தினம்
சிற்குணத்தர் தெரிராமவின்பர் பல சீடரோட நகர் சேர்ந்தனர். (௩)

அந்த வூரிலொரு புறமிருக்கு மளவரியனந்தரொரு சீடன்மா
எந்தவீடு மிடவந்த போதிலவண் ராமவின்பரை யெதிர்ந்து நன்
குந்து மன்பொடு பணிந்தனன் அவனையுற்று நோக்கினருணர்ந்திவன்
சந்த தங்குருவின் விஞ்சு சேவை புரிசத்குணன் குருதனக்கிதன் (௪)

நாளை நேரு முதயத்திறந்து படு மற்பவாயுடனை நண்ணிறென்
நீளவாயுளில னென்றறிந்தனரதைத் தெரிந்து விடை நேர்ந்து போய்
ஆளநின்றதன தாரியன் சரணடைந்திராம நலரன்று சொல்
கோளைவந்தனையுடன் கிளத்தியுயர் குருபணிக்குறைவு கொண்டுளேன். (௫)

என்று நும்பணியியற்ற வெண்ணியுள வெற்கிவாறெதிர் வதாயதே
நன்ற பாக்கிய னெனத்தனைப்பெரிது நனி வெறுத்தழுதிரங்கிறேன்
அன்றவண் சொலுண ரரியனந்தர் பெருமாணிறைந்த வருளாலுனக்
கொன்று மில்லை குறையொன்றுரு மரண நாளையென்றுறுதியோதியே. (௬)

மறுதினத்துதய மாகுமுன்னெழுதலாகி வண்புனல் படிந்து நன்
குறுதியுற்றுவரு சீடரங்கொருத மருகிருக்கவுரை செய்துளே
நிறுவலுற்று நெடுமாலை யுற்றனர் நிலாவு வெள்வளை யொடாழிபொன்
அறுவைகுண்டல கிரீடநூபுரமனைத்து மேர்பெற வனைந்தனன். (எ)

கருநிறங்கொளரி யெய்த வச்சகுண வடிவையன் பொடவர்கண்டு கொண்
டுருகிமற்ற வடிவிடைலயித்துள முறைந்த போதிலெ திருற்றனன்
மருவு சீடனுயிர் கொளுவதற்கு நமன் மாலுமன்பரு மனங்களித்
தொருவுரு துறலு மாழிமேலுழல் வதுந்தெரிந்து நெடிதுற்றனன். (அ)

யாமநேரமவணுற்று மங்கமய நேரிடாம லயர்வெய்தியே
போமதாயின னெழுந்திடர் தரியனந்தர் யோகிடை பொருந்தல் கண்
டேமமாயரு கிருந்த சீடனுயிரே குகாலமிகழ் வெய்தி நாற்
சாமமாயினது சாமியென்றுரை தரத்தெரிந்து கண்விழித்தனர். (௯)

கண்டிறத்தலு மெழுந்து சீடனவர் காலுறப்பணிவு செய்தவண்
அண்டுறப் பிறகு மறுதினத்து தயமான காலேயிலெழுந்துடன்
பண்டெனக்கடி திரக்க வெய்தினது பார்த்திராம நலரதிசயம்
கொண்டிறப்பில தெவ்வாறெனத்தனி வினவலுங்குரு வினருளினல். (ய)

யானகன்ற னனிறப்பை யென்றினிதினே கினன்பிற கெழுந்து சீர்
ஞான நன்குடைய வரியனந்தரிடை நண்ணராம நலர் நன்குதேர்
மோனர் முன்பணிய விவரும் வந்தனே முடிக்க நேருடன் முயங்கினர்
ஆனபின் பரியனந்தரேது முடையன் பிணுக்க வதியில்லேயால். (யக)

உமது சீடனுயிர் காத்திர் நேரொருவரும் முமக்கிலே யெனத்துதித்
தமரராம நலரேயெலாம் விளேயுமாழி மாலருளு மருளினல்
நமரிலென்விளேயு மென்னராம நலர் நன்றெனத்த மிடை நண்ணினர்
தமருடன்றிரு மணுளனும நனி சாற்றியிங்கிவர் தழைத்துளார். (யஉ)

## ஹரியனந்தவைணவர் திருவடிகளே சரணம்.

ஆகச்சரித்திரம் ருரு க்கு செய்யுள் ௪௲௬௱௪௰௪



முற்றிற்று

